*Kumaran̲*

*Āram 18, muttu 7*

*October 03, 1940*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். KUMARAN WEEKLY.

# குமரன்

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 7-0-0

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 18. காரைக்குடி, விக்கிரம-ஒரு புரட்டாசி-மீ 18-உ (3—10—40) முத்து 7

# "காந்தி மாளிகை"யில் காந்தியடிகள் படத் திறப்பு விழா

## சர்தார் வேதரத்னம் பிரசங்கம்

### மகாத்மா வாழ்க்கையில் பல ருசிகரமான சம்பவங்கள்

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபை அங்கத்தினர் கோகலே முரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் நன்கொடையாக அளித்திருக்கும் காந்தியடிகளின் பெரிய திருஉருவப் படத்தைச் சென்ற ஞாயிற்றுக்கிழமை (அடிகள் பிறந்த மக நட்சத்திர தினம்) மாலை 6-15 மணிக்கு நகர சபை மண்டப (காந்தி மாளிகை)த்தில் வேதாரண்யம் சர்தார் அ. வேதரத்தினம் அவர்கள் எம். எல். ஏ. திறந்துவைத்தார். சேர்மன் திறப்பாளரை வரவேற்று மாலையணிவித்தார். மண்டபத்தின் நடுவில் மேலே போகும் பெரிய மாடிப்படிக்கு நேராக கீழ் தளத்தில் நிற்போரும், மேல் தளத்தில் நிற்போரும் பார்க்கத்தக்க விதத்தில், தென்புறச் சுவரில் காந்தியடிகளின் படம் மாட்டப்பட்டிருக்கிறது. இதன் அளவு '8 x 5'; காந்தியடிகளின் உயரத்துக்குச் சரியான $5\frac{1}{2}$ அடி உயரத்தில் திருவுருவம் நிற்கும் பாவனையில் அமைந்திருக்கிறது. பல வர்ணங்களில் (ஆயில் பெயின்ற்) தீட்டப்பெற்றிருக்கும் இவ்வோவியத்தை வரைந்தவர் காரைக்குடி ஸ்ரீ யஸ். கே. அய்யா அவர்களாகும்.

ரோட்டிலிருந்து நகர சபை மண்டபம் போகும் பாதைகளில் மின்சார பல்புகள் போடப்பட்டிருந்தன. மாளிகைக்கு முன்னிருக்கும் காந்தியடிகளின் உருவச் சிலை மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பெற்றிருந்தது. நகர சபை அங்கத்தினர்களும், நகரப் பிரமுகர்களும் பொது மக்களும் ஏராளமாகக் கூடியிருந்தனர். திறப்பு விழாத் தலைவர் வாத்திய கோஷத்துடன் வரவேற்கப்பட்டார். படத்தைத் திறந்து வைத்தபின் எல்லோரும் மேல் மாடியிலுள்ள சபா மண்டபத்துக்குச் சென்றனர். அங்கு சர்தார் வேதரத்தினம், தமது திறப்பு விழா உரையை நிகழ்த்தினார்.

சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைவரை வரவேற்றுப் பேசுகையில் இன்றைய தினம் தமிழ் நாட்டில் விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சில தலைவர்களுக்குள்ளே சர்தார் ஒருவரென்றும், அவர்களைக்கொண்டு இத்திறப்பு விழாவை நடத்துவது கவுன்சிலுக்கே பெருமை தருவதாகு மென்றும், இந்தியாவிலே வேறு எந்த நகர சபைக் கட்டிடமும் மகாத்மா பெயருடன் விளங்கவில்லையென்றும், படத்தைத் தந்துதவிய ஸ்ரீ கோகலே அருணாசலம் செட்டியாரவர்களைப் பாராட்டுவதாயும், அவர்கள் அமைதியாக இருந்து உழைப்பவர்களென்றும், இப்பெரிய படத்தை அவர்கள் 300, 350 ரூ செலவில் தயாரித்திருப்பதாயும், இதைத் தயாரித்துள்ள சித்திரக்காரர் யஸ். கே. அய்யா அவர்கள் அதிக முயற்சியெடுத்து மிக்க நல்ல முறையில் படம் எழுதியிருப்பதைப் பாராட்டுவதாயும் கூறி நன்கொடையாளருக்கும் படம் எழுதியவருக்கும் மாலைகள் அணிவித்தார். ஸ்ரீ வேதரத்னம் அவர்களால் படம் வரைந்தவருக்குக் கதர் ஆடைகள் பரிசாக அளிக்கப்பட்டன.

#### சர்தார் வேதரத்னம்

பின் சர்தார் வேதரத்னம் அவர்கள் பேசியதன் முக்கிய பகுதிகள் வருமாறு:

ஒரு நகர சபை நன்றாக வேலை செய்கிறதென்று கீர்த்தி பெற வேண்டுமானால் அது சேர்மனையோ, மெம்பர்களையோ பொறுத்துக்கிடைப்பதல்ல; அக்நகரத்துத் தோட்டிகளைப் பொறுத்தே நகர சபை கீர்த்தி பெறவேண்டும். மகா பெரிய தோட்டியின் திருஉருவப் படத்தைத் திறந்துவைக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. இது ஒரு பெரிய பொருத்தம். பொய் சொல்லக்கூடாது என்ற விரதம் கொள்பவர்கள் எல்லாம் தோட்டிகளாகத்தான் இருப்பார்கள் போலும். மகாத்மாவும் அத்தகைய விரதம் கொண்டிருக்கிறார். முன் காலத்தில் சத்தியத்தைக் கடைப்பிடிப்பதற்காகப் பல துன்பங்களை அனுபவித்த அரிச்சந்திரனும் ஒரு சமயம் தோட்டியாகவே இருக்க நேர்ந்தது. அதே போல இன்று மகாத்மா காந்தியும் ஒரு தோட்டியாக இருக்கிறார். சென்னை நகர சபையார் அவருக்கு உபசாரப் பத்திரம் படித்துக்கொடுத்தபோது, "நான் ஒரு தோட்டி' யென்று அவரே சொன்னார். நகர சபை அங்கத்தினர்கள் எல்லோரும் தங்களை அப்படி எண்ணிக்கொண்டால்தான் அது சுத்தமாக இருக்கும்.

உலகில் முன் காலத்தில் எத்தனையோ பெரியார்கள் தோன்றியிருக்கிறார்கள். நம் நாட்டிலும், இதர நாடுகளிலும் தோன்றியிருக்கிறார்கள். அவர்கட்கும் காந்திஜிக்கும் என்ன வித்தியாசம் என்றால், அவர்களிடமிருந்த உத்தம குணங்கள் எல்லாம் ஒருங்கே திரண்டு ஒரு உருவமாக இன்று மகாத்மா தோன்றியிருக்கிறார். ஜீவஹிம்சை கூடாது என்று மட்டும் போதித்தார் புத்தர் பகவான். தன்மேல் வந்திருக்கும் கொசுவை, மறந்துகூட நசுக்கிக் கொன்றதில்லை யென்று மகாத்மா பாட்னாவில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் சொல்லியிருக்கிறார்.

சங்கரர் உயர்ந்த உண்மைகளை நம் நாட்டில் வடக்கே இமயம் முதல் தெற்கே குமரிவரைப் பரப்பினார். பல இடங்களிலும் மடங்களை ஸ்தாபித்தார். இன்று மகாத்மா உயர்ந்த தத்துவங்களை உலகம் முழுவதும் பரப்பி வருகிறார். சில தினங்கட்கு முன் அவர் விட்ட அறிக்கையில், "ஜர்மானியர் கேட்பவற்றை யெல்லாம் கொடுங்கள்; ஆனால் உங்கள் மனதை மட்டும் அடிமைப் படுத்தாதீர்கள்" என்று சொன்னார். அவர் சொல்லியபடி நடந்திருந்தால், இன்று இவ்வளவு கஷ்டமும் ஏற்பட்டிருக்க முடியுமா?

அந்தக் காலத்தில் பிறருடைய பாவ மன்னிப்புக்காக இயேசு நாதர் பல துன்பங்களை அனுபவித்தார். அதுமாதிரி இக்காலத்தில், பிறர் செய்த குற்றத்திற்காகத் தாமே பிராயச்சித்தம்செய்து கொள்ளும் மகா புருஷர் இருப்பது நமது புண்ணிய பூமியாகிய இந்தியாவில் தான். வங்காளத்தில் பூக்கா (கன்றில்லாமல் பால்கறக்கும் கொடிய) முறையைக் கண்டு, இனி தான் பால் சாப்பிடுவதில்லை யென்ற பிரதிக்ஞையை யெடுத்துக் கொண்டார் மகாத்மா. அவர் கடு நோய்வாய்ப்பட்டு பால் சாப்பிடாவிட்டால் பிழைக்க முடியாது என்று டாக்டர்கள் சொல்லுந் தருவாயி லிருந்த பொழுதும், 'உயிர்போனாலும் போகட்டும்; பிரதிக்ஞையைக் கைவிடமுடியாது' என்று மறுத்து விட்டார். எல்லோரும் கவலை கொண்டனர். அச்சந்தர்ப்பத்தில் "நீங்கள் பிரதிக்ஞை யெடுத்துக் கொண்ட போது பசுவின் பாலைப்பற்றித் தானே எண்ணிக் கொண்டீர்கள்; ஆட்டின் பாலைப்பற்றிக் கனவிலும் எண்ண வில்லையே, இப்பொழுது ஆட்டுப்பால் சாப்பிடுங்கள்" என்று அன்னை கஸ்தூரிபாய் சொன்னார். மறுமொழி பகர முடியாது காந்தியடிகள் ஆட்டின் பால் சாப்பிட இசைந்தார்; நோயினின்றும் தப்பினார். இன்றும் ஆட்டின் பாலே சாப்பிட்டு வருகிறார்.

காந்திஜி ஏன் முழங்காலுக்கு மேல்வரை மட்டும் ஆடையுடுத்தி யிருக்கின்றார் என்பது ரொம்பப் பேருக்குத் தெரியாதிருக்கலாம். அதுவும் பிறர் பொருட்டால் தான். தமிழ் நாட்டுக்கு வந்திருந்த போது எல்லோரும் கதர் உடுத்த ஆரம்பித்தால், போதிய அளவு கதர் இல்லையே, என்ன செய்வது? என்று ஒருவர் கூட்டத்தில் கேட்டார். "எல்லோருக்கும் போதிய அளவு கதர் ஆடை கிடைப்பது வரை முழங்கால் மட்டும் உடுத்தினாற் போதும் என்று முடிவு கட்டினார் காந்திஜி.

ஹரிஜனங்கட்காகவும், இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகவும் வேறு பலர் செய்த குற்றங்கட்காகவும் பலமுறை உண்ணாவிரதமிருந்திருக்கிறார். ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை உலகுக்கு உபதேசித்தவர் மகமது நபி அவர்கள். இன்று உலகுக்கு அதை நிரூபித்துக் காட்டுபவர் காந்தியடிகளாகும். ராமானுஜர் தாழ்ந்த வகுப்பினரை உயர்த்துவதற்காக, அவர்களுக்கு மந்திரங்களை உபதேசித்து வைஷ்ணவராக்கினார். ஆனால் காந்தியடிகளோ இன்னும் ஒரு படி மேலேபோய், ஹரிஜனங்களை, சாதி மத மாற்றமின்றி உயர்த்தப் பாடுபடுகிறார். திருக்குறளிலுள்ள ஒவ்வொரு செய்யுளுக்கும் பொருத்தமான மனிதர் ஒருவர் உண்டென்றால் அது மகாத்மா காந்திதான்.

அஹிம்சா முறையில் நாட்டை ஆளலாம் என்கிறார். வேரூன்றி நிலைத்துப் போன ஏகாதிபத்தியம், இனி முடியாது என்று விட்டுவிட்டுப்போக அஹிம்சையே காரணமாக இருக்குமானால், வேறொன்று வந்து எப்படி இங்கே வேரூன்ற முடியும் என்று காந்தியடிகள் கேட்கிறார். பிறர் வந்து சுரண்டுவதற்கே இடமில்லாமற் போய்விட்டால் யாரும் வரமாட்டார்கள், அதற்கு ஏற்ற மனப்பான்மை இங்கே ஏற்படவேண்டுமென்கிறார் மகாத்மா காந்தி.

அரசியலுக்கு மட்டுமின்றி வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்துக்கும் அவர் உபதேசிக்கிறார். கல்வித் துறையிலும் அவர் பெரும் புரட்சியை உண்டுபண்ணிவிட்டார். மேனாடு சென்று திரும்பிய ஒரு அறிஞர் வார்தாக் கல்வித் திட்டத்தைப் பற்றி என்னிடம் சிலாகித்துப் பேசினார். பெரிய பெரிய கல்வி நிபுணர்களெல்லாம் அதை அங்கீகரித்துவிட்டார்கள். இந்தத் திட்டம் ஒன்றை மட்டும் நிறைவேற்றி நாடு முற்றும் பரப்பிவிட்டாலும் அதுவே தேசத்திற்குப் பெரிய சேவையாகும் என்று அறிஞர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். ஏனெனில் ஒரு நாட்டின் கற்கதி அதன் கல்வித் திட்டத்தி லடங்கி யிருக்கிறது என்னலாம். ஜப்பான் சீனாவுக்கு அனுப்பிய இறுதிக் கடிதத்தில் ஐந்து நிபந்தனைகளைக் குறிப்பிட்டிருந்தது. அவற்றில் நான்கு ராணுவ சம்பந்தமானவை; ஒன்று, 'சைனாவிலுள்ள ஆரம்பப் பள்ளிக்கூடப் பாடப் புத்தகங்களை நாங்கள் தயாரிக்கவேண்டும்' என்பது. இதிலிருந்து ஆரம்பக் கல்வியின் அபார சக்தி விளங்குகிறதல்லவா? நம் நாடு இவ்வளவு கேவலஸ்திதிக்கு வந்ததன் காரணமென்ன? நமது கல்வியை நசுக்கி, நல்ல உணர்ச்சியேற்பட முடியாமல் ஆரம்பத்திலேயே கிள்ளிவிட்டார்கள். அதனால்தான் கல்வி முறையைத் திருத்தவேண்டுமென்பது.

அரசியல் சீர்திருத்தத்திலும், மகாத்மா அரசியல் நிர்ணய சபை வேண்டுமென்கிறார்; அரசாங்கத்தாரோ சர்வ கட்சி மகாநாட்டைக் கூட்டவேண்டுமென்கிறார்கள். இரண்டுக்கும் என்ன வித்தியாசம்? சர்வ கட்சி மகாநாடென்றால், நாளாந் மாதிரிப் புதுப்புதுக் கட்சிகள் உண்டாகும். முன்னேற்றத்துக்குப் பெரிய முட்டுக்கட்டையாக நிற்கும். ஒற்றுமை யேற்பட வழியில்லாது போய்விடும். உலகில் எத்தனையோ அரசியல் முறைகள் இருக்கின்றன; எங்காவது கூட்டுத் தொகுதி, தனித் தொகுதி யெனத் தனித்தனி இருக்கின்றனவா? இந்தியாவுக்கென அபூர்வமாகக் கண்டுபிடித்த முறை யிது!

(8-ம் பக்கம் பார்க்க)

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 4 முதல் இரவு 10-30 வரை.
தமிழில் செய்திகள்:— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### அக்டோபர் 3உ வியாழன்

2·00—2·30 அந்துகூரி யக்ஞநாராயண சாஸ்திரி பிடில்.
5·00—6·00, 6·45—7·00 } டி பலராமன் கிளாரினெட்
6·05—6·30, 8·30—9·00 } கொத்தமங்கலம் சீனிவாசன் பாட்டு
6·30—6·45 உத்தம அரசி—நாடகம்
7·50—8·30, 9·30—10·00 } ஸ்ரீமதி பெங்களூர் நாகரத்னம்மாள் பாட்டு

★

### 4உ வெள்ளி

1·35—2·00 எ. கே. சுப்பராவ் புல்லாங்குழல்.
5·00—5·45, 8·30—9·00 } எம். உதயவர்ம ராஜா வீணை
6·05—6·30 கமலாதேவி தோம்பட் பாட்டு
6·30—7·00, 7·50—8·30 } கே. எ. ஸ்ரீநிவாசன் பாட்டு
9·45–10·30 ஸ்ரீமதி டி. வி. மீனாக்ஷி ஷை

★

### 5உ சனி

5·15—6·00, 6·30—7·00 } ஜயா பிலிம்ஸ் வாத்திய கோஷ்டி
6·05—6·30 ஸ்ரீமதி டி. வி. சுப்புத்தாயி பாட்டு
7·50—9·00 திருச்சியிலுள்ளபடி

★

### 6உ ஞாயிறு

1·35—2·00, 4·00—4·30 } ஸ்ரீமதி டி. நாகம்மா பாட்டு
2·00—2·30, 5·00—5·45 } சி. ஆர். மணி பிடில்
6·30—7·00, 8·30—9·00 } துறையூர் ராஜகோபால சர்மா பாட்டு
7·50—8·30, 9·30–10·00 } ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி நடராஜன் பாட்டு
10·00–10·30 ஜி. என். தண்டபாணி வீணை ஆர். கே. வெங்கடராம சாஸ்திரி பிடில்

★

### 7உ திங்கள்

1·35—2·00 ஸ்ரீமதி வி. எஸ். ராஜம் பாட்டு
5·00—5·45 எம். முத்தையா பிள்ளை பிடில்
6·05—6·30, 9·45–10·30 } டி. எஸ். கிருஷ்ணய்யங்கார் பாட்டு
6·30—7·00 கே. சுப்ரமண்யம் வீணை
7·50—9·15 திருச்சியிலுள்ளபடி

★

### 8உ செவ்வாய்

2·00—2·30 எஸ். சோமசுந்தரம் பிள்ளை பாட்டு
5·00—5·45, 9·30–10·00 } ஸ்ரீமதி பி. என். ராஜாயி பாட்டு
6·05—6·30 எஸ். சுப்பையா புல்லாங்குழல்
6·30—7·00 பரிமளக்கூந்தல்—நாடகம்
7·50—9·00 சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை பாட்டு

★

### 9உ புதன்

1·35—2·00 வி. எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் கோட்டுவாத்தியம்
5·00—6·00, 6·30—7·00 } வ. பார்த்தசாரதி நாதசுரம்
7·50—8·30 ஸ்ரீமதி பி.வி. பொன்னம்மா பாட்டு
8·30—9·00 ஸ்ரீமதி வரலக்ஷ்மி ஷை
9·30–10·30 மகிஷாசுர வதம்—சூலமங்கலம் வைத்யநாத பாகவதர் சங்கீத உபந்யாசம்

## பிரிட்டனுக்கு அமெரிக்க வியாபாரக் கப்பல்கள்

### விற்பனைக்கு இடமிருக்கிறது

★

"டெய்லி டெலக்ராப்" பத்திரிகையின் வாஷிங்டன் நிருபர் இந்தத் தந்தியை அனுப்பியிருக்கிறார்:—

அமெரிக்க ஐக்கிய ராஜ்யத்துக்குச் சென்றுள்ள பிரிட்டிஷ் கொன்விளைக் கமிஷன் வியாபாரக் கப்பல்களைப்பற்றிப் பேரம் பேசிக்கொண்டிருக்கிறது. அமெரிக்க ஐக்கிய ராஜ்யச் சர்க்காருக்குச் சொந்தமான 30 கப்பல்களை அந்தக் கமிஷன் வாங்கக்கூடுமென்று தோன்றுகிறது. ஒவ்வொன்றும் 10,000 டன் எடையுள்ள இந்தக் கப்பல்கள் தற்போது வர்ஜீனியாவில் ஜேம்ஸ் நதியில் தங்கியிருக்கின்றன.

இந்த பேரம் நிறைவேறிவிட்டால், யுத்தம் ஆரம்பித்தபின் கப்பல் வாங்குவதற்காக நடந்துள்ள பேரங்களில் இதுவே மிகப் பெரியதாயிருக்கும். கப்பல்கள் ஓயாமல் வாங்கப்பட்டு வந்திருக்கின்றன. அமெரிக்காவுக்குச் சொந்தமான கப்பல்களை நடுநிலைமை நாடுகளில் பதிவு செய்வதற்கும் முன்னமே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இப்படிச் செய்வதால் அவைகள் பிரிட்டிஷ் வியாபாரத்தில் ஈடுபட்டு வருவது சாத்தியமாயிருக்கும்.

இந்த பேரத்தின் விஷயத்திலோ கப்பல்கள் ஒரேயடியாய் விற்பனை செய்துவிடப்படும். கப்பல் கமிஷன் விலை கேட்கும்படி விளம்பரம் செய்யும்; பிரிட்டிஷ் சர்க்கார் தாங்கள் வாங்குவதாகக் கூறித் தொகையைத் தெரிவிப்பார்கள். ஜேம்ஸ் நதியிலுள்ள இந்த வியாபாரக் கப்பல் படை தற்போதும் சரி பின்னும் சரி, அமெரிக்க ஐக்கிய ராஜ்யத்துக்கு உதவாது. ஏனெனில் இப்போது நடுநிலைமைச் சட்ட நிர்ப்பந்தங்களிருக்கின்றன; பின்னால் உதவுவதற்குத் திட்ட மாறுதல் தடையாயிருக்கிறது. ஆகவே இந்த விற்பனைக்கு எவ்வித ஆட்சேபணையும் இராதென எதிர்பார்க்கப்படுகிறது. இந்தக் கப்பல்களின் யந்திரங்கள் நல்ல நிலைமையிலேயே இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் அவைகளைப் பழுது பார்ப்பதற்குச் சுமார் இரண்டு மாதம் பிடிக்குமாம்.

### ஒத்திவைப்புப் பிரேரணை கொண்டுவர உரிமை

செப்டம்பர் 20-ம் தேதிய தூத்துக்குடி நகர சபை நடவடிக்கைகளை ஜில்லா கெஸட்டில் பிரசுரிப்பதற்காக அனுப்புவதை அக்டோபர் 3-ம் தேதி வரை ஒத்திவைக்குமாறு தூத்துக்குடி ஜில்லா முன்சிப் ஷை நகர சபைத்தலைவருக்கு ஒரு தற்காலிகத்தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறார். கவுன்சிலர் ஸ்ரீ துரைசாமி நாடார் செப்டம்பர் 20 ம் தேதி கூட்டத்தில் ஒரு ஒத்திவைப்புப் பிரேரணையைப் பிரேரித்ததாயும், அதை இன்னொரு கவுன்சிலர் ஆமோதித்ததாயும், எனினும் தீர்மானத்தை ரிக்கார்டு செய்யவோ அதைப்பற்றி முடிவு செய்யவோ தலைவர் மறுத்துவிட்டாரென்றும், முனிசிபல் சட்டப்படி தமக்கு கவுன்சிலில் எச்சமயத்திலும் ஒத்திவைப்புப் பிரேரணை கொண்டுவர உரிமையுண்டென்றும், ஷை சபை நடவடிக்கைகள் தமது தீர்மானமில்லாமல் பூர்த்தியாகாவென்றும், ஆகவே அவற்றை கெஸட்டுக்கு அனுப்பாதவாறு தடுக்கவேண்டுமென்றும் குறிப்பிட்டு வழக்குத் தொடர்ந்திருக்கிறார். அதையொட்டியே மேற்கண்டபடி தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

எவர் பொருட்டாவது எதன் பொருட்டாவது காத்திருக்க வேண்டாம்.

### 10உ வியாழன்

2·00—2·30 வி. சந்தானமய்யா பிடில்
4·00—4·30 நவராத்திரி விசேஷ நிகழ்ச்சி
5·00—5·45 என். பார்த்தசாரதி ஸாக்ஸோபோன்
6·05—6·30, 8·45—9·15 } மாயவரம் எஸ். ராஜம் ஐயர் பாட்டு
6·30—7·00 மாடப்பள்ளி நரசிங்க ராவ் வீணை
7·50—8·45 ஆசியாவின் ஜோதி—ஆங்கில நாடகம்; ஸ்ரீமதி ருக்மணி தேவி அருண்டேலும் கலாக்ஷேத்திர நடிகர்களும்
9·30–10·00 குமாரி வசந்தா பாட்டு

## நடப்புவட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்னை | இரங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| பிரமாதி ஆவணி | 32 | 0-6-0 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| புரட்டாசி | 30 | 0-5-6 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| ஐப்பசி | 29 | 0-5-6 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| கார்த்திகை | 30 | 0-5-6 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| மார்கழி | 29 | 0-5-9 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| தை | 30 | 0-6-0 | 0-5-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| மாசி | 30 | 0-6-0 | 0-4-9 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| பங்குனி | 30 | 0-6-6 | 0-5-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| விக்கிரம சித்திரை | 31 | 0-6-9 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| வைகாசி | 31 | 0-6-6 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| ஆடி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |



## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள்:— 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 5 முதல் இரவு 10 வரை.
தமிழில் செய்திகள்:— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### அக்டோபர் 3உ வியாழன்

1·35—2·00 கே.வி. தியாகராஜன் பாட்டு
5·15—6·00 ஸ்ரீமதி டி. ராமதிலகம் ஷை
7·15—7·30 காலாவதி—தமிழ் நாடகம்
7·50—9·30 பல்லடம் சஞ்சீவிராவ் புல்லாங்குழல், வி. சுந்தரேசன் பிடில், உமையாள் புரம் கணேசய்யர் மிருதங்கம்.

★

### 4உ வெள்ளி

1·35—2·00 எம். ஜி. நாகோஜிராவ் பாட்டு
5·15—6·00 அ. இ. ரே. வாத்திய கோஷ்டி
6·05—30 ஸ்ரீமதி டி. எஸ். பகவதி பாட்டு
7·50–8·30 திருவாவடுதுறை ராஜாத்தினம் பிள்ளை நாதசுரம், நீடாமங்கலம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை தவுல்

★

### 5உ சனி

5·15—6·00 சென்னையிலுள்ளபடி
6·05—6·30 டி. கே. நாகராஜனும் டி. கே. ஜயராமனும் பாட்டு
7·50—9·20 நாத சங்கீத மணி மண்டபம். ஒரு இசைச் சித்திரம்—டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் விளக்கம்

★

### 6உ ஞாயிறு

5·15—6·00 அரக்கேரே நாராயணராவ் பாட்டு
6·05—6·30 அ.இ.ரே. வாத்திய கோஷ்டி
7·50—9·20 ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் பாட்டு, வி. சுந்தரேசன் பிடில், உமையாள் புரம் கணேசய்யர் மிருதங்கம்

★

### 7உ திங்கள்

1·35—2·00, 6·05—6·30 } கே. எல். ரங்கதாஸ் பாட்டு
5·15—6·00 மன்னார்குடி மாணிக்கம் பிள்ளை நாதசுரம்
7·00—7·15 திருவள்ளுவரின் தனிச்சிறப்பு—பாஷை— ஜகவீர பாண்டியன் பேச்சு.
7·50—8·30 நந்தனார் சரித்திரம்

★

### 8உ செவ்வாய்

1·35—2·00, 6·05—6·30 } எஸ். கே. வெங்கட்ராமய்யர் பாட்டு
5·15—6·00 "கானலோலா" வீணை
7·00—7·15 பிரயாணக் கதை — எஸ். ராமனுதன் பேச்சு
7·50—8·30 சென்னையிலுள்ளபடி
9·00—9·15 தபஸ்வினி— நாடகம்

★

### 9உ புதன்

1·35—2·00, 6·05—6·30 } எம். கனகசபைப் பிள்ளை பாட்டு
5·15—6·00 கே. வி. ஜயராமையர் பிடில்
7·50—9·20 ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் பாட்டு, கே. வி. தியாகராஜன் பிடில், வாளாடி சுப்ரமணிய பிள்ளை மிருதங்கம்

★

### 10உ வியாழன்

1·35—2·00 குமாரி டி. வி. சியாமளா பாட்டு
5·15—6·00 கண்டதேவி திருவேங்கடம் ஐயங்கார் ஷை
7·50—9·20 கே. எஸ். நாராயணசாமி ஐயர் வீணை.

நீங்கள் 'எல்லாம் செய்ய வல்லவர்கள்' என்று நம்புங்கள்.



# சிறுவர் சமூகமும் கிராம முன்னேற்றமும்

(ரேவரேண்டு எச். ஏ. பாப்ளி பி. ஏ.)

பள்ளிக்கூடம் ஊர் முன்னேற்ற நிலையமாக எப்படி வேலை செய்ய முடியுமென்று, கிராம முன்னேற்றத்திலும் கல்வி அபிவிருத்தியிலும் மட்டற்ற பற்றுடையவராய்த் தமது வாழ்நாளையே இக் நாட்டுக்கு அர்ப்பணம் செய்துள்ள இக் கிறிஸ்தவப் பெரியார் கூறும் முதிர்ந்த அனுபவ மொழிகளை ஈண்டு காண்க. "இதுவே தீங்கு செய்யப்படாத போர். இன்னா வில்லாத வெற்றி. மகாத்மா காந்தி முதல் நமது தேசத்துப் பெரியார் நமக்கு வழிகாட்டிகளாய் இருக்கிறார்கள். நாம் அவர்களுடைய பாதையில் நடந்துகொள்வது உசிதம். அப்படிச் செய்வோமானால் நமக்குப் பேரானந்தமும் கடவுளின் உயர்ந்த ஆசியும் கிடைக்கும்" என்பதாக அவர் கிராம ஆசிரியர்களை இக் கட்டுரையி னிறுதியில் அழைக்கின்றார். இக் கட்டுரை மொழிபெயர்ப்பல்ல. ஆங்கிலப் பெரியாரின் சுயத் தமிழ். திருக்குறளில் அவருக்குள்ள அவாவையும் ஆற்றலையும் இடையே காண்க:

★

கிறிஸ்தவ வேதத்தில் பின்வரும் வசனம் காணப்படுகிறது:

"அப்போது ஓனாய் ஆட்டுக் குட்டியோடே தங்கும், புலி வெள்ளாட்டுக் குட்டியோடே படுத்துக்கொள்ளும்; கன்றுக் குட்டியும் பால சிங்கமும் காளையும் ஒருமித்திருக்கும்; ஒரு சிறு பையன் அவைகளை நடத்துவான்."

இவ்வசனத்தில் நாட்டுப்புறத்தின் வியப்பான மாறுதல் குறிக்கப்பட்டிருக்கின்றது. இம்மாறுதலுக்குச் சிறுவன் ஒருவன் காரணமாவான் என்னும் பக்தரின் கோட்பாடு இவ்வுரையில் விளங்கும். ரவேந்திரநாத் தாகோர் பெரியார் இக் கொள்கையைக்கொண்டே பின்வருமாறு எழுதியுள்ளார்:

"குழந்தாய்! அதோ, மனமடிந்து வாடி நிற்போர் நடுவிற்போய் நின்றுகொள். பகற் பொழுதின் போராட்டத்தை மறைத்து அகற்றிச் சமாதானம் அருளும் மாலைப்பொழுதைப்போல் அமர்ந்த கண்களால் அவர்களை நோக்கு. குழந்தாய்! அவர்கள் உன் முகத்தைப் பார்த்துக்கொண்டே யாவற்றின் உண்மையையும் அறிந்துகொள்வார்கள். அவர்கள் உன்னை நேசித்துக்கொண்டே தாங்களும் ஒருவர்பால் ஒருவர் அன்பாயிருந்துகொள்வார்கள்.

### சிறுவர் சமூகம்

கிராமப் பள்ளிக்கூடங்களை சிறுவர் சமூகங்களென்று ஒருவாறு உரைப்பது உண்மையே. சிறுவர் கூட்டு வாழ்க்கை இவைகளில் காணப்படுகின்றது. இக் கூட்டு வாழ்க்கை அநேக விஷயங்களில் ஊராரின் கூட்டு வாழ்க்கையுடன் ஒன்றுபட்டுள்ளது. ஊரின் பொதுச் சமூகத்தில் இச்சிறுவர் சமூகம் ஒரு பகுதி யென்று சொல்லலாம். பள்ளிக்கூடத்தில் காணப்படும் பல முறைமைகளும் நடத்தைகளும் கொஞ்சங் கொஞ்சமாக ஊரிலும் பரந்து போகும். எவ்வாறு சிவப்பு மருந்துத் தூள் கிணற்றின் தண்ணீர் முழுவதையும் சிவப்பாக்கி விடுகின்றதோ அவ்வாறே பள்ளிக்கூடத்தின் சிறுவர் சமூக ஒழுங்குகள் ஊரின் சமூகப்பான்மையை மாற்றிவிடும்.

பஞ்சாப் மாகாணத்தின் ஊர் முன்னேற்ற முயற்சிகளை நடத்தும் ப்ரேன் துரை கிராமப் பள்ளிக்கூடங்கள் செய்யக்கூடிய இயக்கங்களைப்பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளார்:

"பஞ்சாப் மாகாணத்தின் ஊர்களில் அநேக ஆண்டுகளாய் முயற்சி செய்து உழைத்தபின் கிராமப் பள்ளிக்கூடத்தைத் தவிர இந்தியாவின் கிராமங்களைப் புதுப்பித்து மாற்றுவதற்கேற்ற கருவி வேறொன்றுமில்லை என்பது என் துணிபு. புதிய வாழ்க்கை பள்ளிக்கூடத்தில் கற்பிக்கப்படுவதுமன்றி, ஆசிரியர்களும் மாணவர்களும் சேர்ந்து அவ்வாறே வாழ்ந்து கொள்வதும் பள்ளிக்கூடத்தின் சுற்றுப்புறங்களிலும் காணப்படுவதும் உண்டென்றால், ஊர் முழுதும் இத்தூண்டுதலுக்கிணங்கி வாழ்ந்து தனது முன்னேற்றம் நாடித் தேடும் என்பதற்கு ஐயமின்றே. கிராமப் பள்ளிக்கூடமே கிராமத்திற்குச் சேவை புரிதல் வேண்டியது. ஊரார் அறியவேண்டிய விவரங்களை அது கற்பித்துக் கிராம முன்னேற்ற முயற்சிக்கெல்லாவற்றிற்கும் பொது நிலையமாதல் வேண்டும்.

### உழைக்கும் வழிகள்

கிராமப் பள்ளிக்கூடங்கள் கிராமங்களின் பொது வாழ்க்கையைச் சீராக்கக்கூடிய முக்கிய வழிகள் பின்வருமாறு:

1. கல்விப்பயிற்சி இயக்கங்கள் ஊரார் புதிய கல்வியையும் அறிவுக்கேற்ற பான்மையையும் அடையத்தக்க பொது நிலயங்களாகலாம். கட்டுரைகளும், நாடகங்களும் பொது தர்க்காலோசனைக் கூட்டங்களும் ஆசிரியர்களால் நடத்தப்படலாம். சங்கீதப் பயிற்சியும் பஜனைகளும் காலக்ஷேபங்களும் நடைபெறுவது நன்று. பள்ளிக்கூடத்தில் ஒரு சிறு புத்தகாலயம் நிறுவப்படலாம், மாலையில் வாலிபர் வந்து பல பத்திரிகைகளையும், நூற்களையும் வாசிக்கக்கூடிய வசதி ஏற்படவேண்டும். வாரந்தோறும் ஒரு மாலையிலாவது உலக சமாசாரங்களை ஒருவர் வெளியிடுவது நலம். முதியோர் கல்விக் கழகம் ஒன்று பள்ளிக்கூடத்தில் ஏற்படுத்தலாம். ஊர் வாலிபர் சேர்ந்து தேசிய முன்னேற்றம், ஜனசார சீர்திருத்தம், முதலியவற்றைக் காண்பிக்கும் நாடகங்களை நடித்துக் காட்டலாம்.

2. இரண்டாவது பொருளாதார விஷயத்தில் கிராமப் பள்ளிக்கூடம் முன்னேற்ற முயற்சிகளை நடத்தக்கூடும். மற்ற கிராமங்களிலும் தேசங்களிலும் அத்தகைய ஏற்பாடுகளைப்பற்றிப் பிரசாரம் செய்யலாம். சில குடிசைக் கைத்தொழில்களை வெளிப்படுத்தி அவைகளில் பலர் பழகும்படி ஏற்பாடு செய்வது நலம். தக்ளியினாலும் ராட்டையினாலும் நூல் நூற்றலுக்குரிய ஏற்பாடுகள் நடத்தப்படலாம். தேனீக்களை வளர்த்தலும், நல்ல கோழிகளை வளர்த்தலும், பாய் பின்னல், கூடை முடைதல் முதலிய கைத்தொழில்களைக் கற்பிக்கும் ஏற்பாடுகளை நடத்துவதும் நன்று. கைத்தொழில் வழியாகச் செய்யப்படும் பொருட்களையும், அவைகளுக்குரிய கருவிகளையும் காண்பிக்கும் பொருட்காட்சிகள் வைக்கப்படலாம். விவசாய முன்னேற்றத்திற்குரிய முயற்சிகள் விவசாய இலாகாவின் உத்தியோகஸ்தர்களின் உதவியால் நடத்தப்படலாம்.

பள்ளிக்கூடத்தைத் தவிர வேறு பொது நிலயம் ஊரில் கட்டப்பட்டிருந்தால் ஆசிரியர்கள் இதற்கு வேண்டிய உதவிபுரிவது நலம்.

3. மூன்றாவது கிராம சுகாதார அமைப்பு விஷயத்தில் கிராமப் பள்ளிக்கூடங்கள் அநேக முயற்சிகளை நடத்திவரலாம். முதலாவது வருங்காலத்தின் குடிகளாகிய சிறுவர்கட்கு சுகாதார விதிகளையும் ஏற்பாடுகளையும் போதிப்பது அவசியம். சுகாதார வாரக்கொண்டாட்டத்திற்கேற்ற ஏற்பாடுகளை நடத்தும்படி ஆசிரியரும், மாணவரும் சேர்ந்து பேருதவி செய்யலாம். நாடகங்கள், பாட்டுகள், அட்டைப்படங்கள் முதலியவைகளால் சிறுவர் ஊராருக்கு சுகமுள்ள வாழ்க்கையின் குறிப்புகளைத் தெளிவாய் வெளிப்படுத்தக்கூடும். சுத்த உடல், சுத்த ஆடை, சுத்த வீடு, சுத்த வீதி என்பவைகளைப் பற்றி சிறுவர்களின் மனதிலும் பெரியோருடைய மனதிலும் உணர்ச்சி பதியத்தக்கதாக சிறுவர் சங்கங்களினாலும் மற்ற ஏற்பாடுகளாலும் ஆசிரியர்கள் முயற்சிகளை நடத்தலாம். பிரத்யட்ச முறையில் பாடம் போதிக்கும் (Project Method) ஆசிரியர்கள் இவைகளெல்லாவற்றையும் சாதாரண பாடங்களுடன் சேர்த்துக் கொண்டு மாணவர்கள் அத்தகைய திட்டங்களை எடுத்து நடத்தும்படி அவர்களைத் தூண்டலாம்.

4. நான்காவது, விளையாட்டுகள் அவகாச நேரத் தொழில்களின் விஷயத்தில் கிராமப் பள்ளிக்கூட மாணவர்கள் நல்ல மாதிரியை வெளிப்படுத்தலாம். அவகாச நேரங்களில் ஊரார் மன நேசங்களுக்கு நன்மை பயக்கத்தக்க அலுவல்களை ஏற்படுத்தினால் அவர்கள் கள்ளுக்கடை முதலிய தீய வழிகளில் செல்லமாட்டார்கள் என்பது சேலம் ஜில்லாவில் காணப்பட்டிருக்கிறது. இத்தகைய நல்ல ஏற்பாடுகளை நடப்பிக்காமலிருந்தால் தகாத வழிகளில் நேரம் கழித்துவிடுவார்கள். பாடசாலை மாணவர்கள் மூலமாய் ஊராருக்குப் பற்பல கிராம விளையாட்டுகளை வற்புறுத்தி நடத்தலும், பாட்டுக் கச்சேரி முதலியவற்றை வைத்தலும், சொற்பொழிவு முதலிய கூட்டங்களை ஏற்படுத்தலுமாகிய இவைகள் கிராம ஆசிரியர்கள் செய்யக்கூடியவைகள்.

### கிராமத்தின் நடு நிலையம்

இவ்வாறாகக் கிராமப் பாடசாலை கிராம சமூகத்திற்கு ஒரு நடு நிலயமாகி, அநேக முன்னேற்ற முயற்சிகளை எழுப்பக்கூடிய இடமாகும். அமெரிக்கா, டென்மார்க்கு, இங்கிலாந்து முதலிய ஐரோப்பிய நாடுகளில் கிராம ஆசிரியர்களும், பாடசாலை மாணவர்களும் இத்தகைய வேலையைக் கிரமமாக நடத்திக்கொண்டு வருவார்கள். அவர்களால் அநேக விஷயங்களில் ஊர் நிலைமை மேன்மைபெற்று உயர்ந்தது.

மயிலாப்பூர் தமிழ் ஞானி முன்னமே பாடியதை நினைப்பூட்டுகிறேன்.

> தொட்டனைத்தூறு மணற்கேணி—மாந்தர்க்குக்
> கற்றனைத்தூறும் அறிவு

இவ்வாறு உண்மையான அறிவைப்பற்றி உரைத்தார். எல்லா அறிவும் அறிவல்ல என்று நாம் சொல்வது உண்மை. ஊரார்க்கு நீங்கா அறிவே அறிவாம் என்றும் சொல்லலாம்.

> ஊருணி நீர் நிறைந்தற்றே—உலகவாம்
> பேரறிவாளன் திரு

என்னும் குறள் பொருளாகிய செல்வத்தைக் குறிக்கின்றதுமன்றி அறிவாகிய அரிய செல்வத்தையும் குறிக்கும் என்பதற்கு ஐயமின்றே. காந்திநகர் என்னும் நிலயம் எவ்வாறு சுற்றிலுமிருக்கின்ற எல்லா ஊர்களுக்கும் புத்துயிர் பாய்ச்சும் அரிய குளமாகிறதோ அவ்வாறே ஒவ்வொரு கிராமப் பாடசாலையும் தனது கிராமத்திற்கு அத்தகைய நன்னிலயமாதல் வேண்டும். நமது தேச முன்னேற்றத்தில், விசேஷமாக ஊர் முன்னேற்ற முயற்சிகளில், கிராமப் பாடசாலைகள் மூலமாய் அதிகம் செய்யப்படும்.

### கிராம முன்னேற்ற ஊழியர்

ஆசிரியர்கள் தங்களை ஊர் முன்னேற்ற ஊழியர் என்று நினைத்துத் தங்களை இவ் வேலைக்கு ஒப்புக்கொடுத்தால் கிராம வாழ்க்கையில் அநேக நல்ல மாறுதல்கள் சீக்கிரத்தில் நடப்பது நிச்சயம். கிராம ஆசிரியர்களே! எழுந்திருந்து உங்கள் உயர்ந்த அழைப்புக்கு இணங்கி இம்மேம்பாடான ஊழியத்தில் உங்கள் நேரத்தையும் திறமையையும் செலவாக்குங்கள். இதுவே தீங்கு செய்யப்படாத போர். இன்னா வில்லாத வெற்றி. மகாத்மா காந்தி முதல் நமது தேசத்துப் பெரியார் நமக்கு வழி காட்டிகளா யிருக்கிறார்கள். நாம் அவர்களுடைய பாதையில் நடந்துகொள்வது உசிதம். அப்படிச் செய்வோமானால், நமக்குப் பேரானந்தமும் கடவுளின் உயர்ந்த ஆசியும் கிடைக்கும்.

"ஊருடன் கூடி வாழ்"
—'குடிநூல்' ஆண்டு மலர்

## 452-ம் அறையின் மர்மம்!

### பிரிட்டனுக்கு அமெரிக்கர் உதவி

நியூயார்க்கில், கிராண்ட் ஸெண்ட்ரல் ஸ்டேஷனுக்கு அருகே, வண்டி, கார் சத்தம் காதைத் தொளைக்கும் 42-வது கிழக்குத் தெருவில், பெரிய, பண்டைக்கால ஹோட்டல் ஒன்று உள்ளது.

அடக்கமான அதன் முன் கூடத்தில், உயரமான சலவைக்கல் தூண்களுக்கு இடையே, தடித்த மிருதுவான ஜமுக்காளங்களுக்குமேலே, உட்கார்ந்தால் அணைத்துக்கொள்ளும் பல சோபாக்கள் போடப்பட்டிருக்கின்றன.

கனவான்களும் வயதான சீமாட்டிகளும் நிறைந்த இந்த அமரிக்கையான இடத்திலா சாகசச்செயல்களை எதிர்பார்ப்பது? என்றாலும் இக்காலத்தில் எல்லா அதிசயங்களும்தான் நடக்கின்றன. கண்ணை மூடிக்கொண்டு பின்னல் வேலையிலேயே ஈடுபட்டிருக்கும் இந்த நரைத்தலைப் பாட்டிக்கும், பத்திரிகை படித்துக்கொண்டிருக்கும் பருத்த தாத்தாவுக்கும் நடுவேயுள்ள சோபாவில் அமர்ந்து என்ன நடக்கிறதென்று பார்ப்போம்.

அதோ வருகிறார்கள் பல அமெரிக்க யுவர்கள்—இங்கே சந்திப்பது என்று முன்பே பேசிக்கொண்டிருந்தார்கள் போலும்! அவர்களில் சிலருக்குச் சரியாய் உடை தரிப்பதில்கூட அசிரத்தை. இன்னும் சிலர் அலைச்சலால் மெலிந்தவர்போல் காணப்படுகிறார்கள். மற்றும் சிலர் நல்ல உயரம்—உஷ்ணப் பிரதேச வாசத்தால் கறுத்து உலர்ந்த தோற்றம்.

அவர்கள் இவ்விடத்திற்குப் புதியவர்கள்போல் மெள்ள மெள்ளச் செல்லுகிறார்கள். 452-வது அறை எங்கே யிருக்கிறதென்று அவர்கள் கேட்கும்போது ஹோட்டல் வேலைக்காரி அவர்களைச் சட்டென்று திரும்பி உற்றுப் பார்க்கிறாள்—"நீங்களும் அவர்களைச் சேர்ந்தவர்கள் தானா?" என்று கேட்பதுபோல.

452-ம் அறையில் என்ன நடக்கிறது? அவர்கள் எல்லாரும் அங்கே வந்த பிறகு, தாங்கள் ஒவ்வொருவரும் தேர்ச்சி பெற்ற விமானி என்றும், பிரிட்டிஷாருக்கு விமானம் ஓட்ட விரும்புவதாகவும் அறிவிக்கிறார்கள். அவ்வறையில் மேஜையருகே உட்கார்ந்து எழுதிக்கொண்டிருக்கும் ஆள் ஒருவன் பின்வருமாறு என்னிடம் கூறுகிறான்:

"அப்படியானால் சரி சொல்லுகிறேன், கேளுங்கள். ஆனால் ஒன்று இது படை திரட்டும் ஆபீஸ் அல்ல. அமெரிக்க ஐக்கிய நாட்டில் அயல்நாட்டார் படை திரட்டுவது சட்ட விரோதம். இது வெறும் செய்தி ஆபீஸ். பிரிட்டிஷ் விமானப் படையிலும், கானடா விமானப் படையிலும் சேரப் பலர் விரும்புகிறார்கள். அவர்கள் எப்படி, எங்கே போனால் சேரலாம் என்று நாங்கள் அறிவிக்கிறோம். அவ்வளவுதான்."

452-ம் அறையைப்பற்றி அமெரிக்காவில் விளம்பரம் ஏதும் செய்யப்படவேயில்லை. வாய் வதந்தியாகத்தான் அவ்விஷயம் அமெரிக்கா எங்கும் பரவியுள்ளது.

இதோ ஒரு விமானி மேஜைமீது ஓர் அறை அறைந்து சொல்லுகிறார்: "என் பாட்டி ஆங்கிலேய ஸ்திரீ—எனக்கு நாஜிகள் என்றாலே ரத்தம் கொதிக்கிறது. தெரிந்ததா? அங்கே என்னைக் கொஞ்சம் அனுப்பி அவர்கள் பல்லையுடைத்து விட்டு வர ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்."

ஆகா பேஷாகச் செய்யலாம்.—அது தான் நடந்து வருகிறது.

இப்படியாக அமெரிக்கா எங்கிலுமிருந்து வருகிறார்கள். அவர்களுக்கு வேண்டிய சமாசாரம் அங்கே தெரிவிக்கப் படுகிறது. பிறகு அவர்கள் விமானத்திலோ, ரயிலிலோ ஏறிக் கானடாவுக்குப் போகிறார்கள்.

கானடாவின் விமானப் படையில் ஏராளமான அமெரிக்கர்கள் இருந்து வருகிறார்கள். இங்கிலாந்தில் சுமார் நூறு முதல் 200 அமெரிக்க விமானிகள் வேலை செய்து வருவதாயும், இன்னும் பலர் வந்துகொண்டிருப்பதாயும் தெரிகிறது. நிச்சயமான புள்ளி விவரம் கிடைப்பது எளிதாயில்லை.

அமெரிக்காவும் பிரிட்டனும் சில வழிகளில் ஒன்றிற்கொன்று சம்பந்தப்பட்டு வருவதாக சர்ச்சில் கூறினாரல்லவா? அவைகளில் இதுவும் நன்றுபோலிருக்கிறது.







## பிரிட்டனின் அற்புத விமானங்கள்

### கண்டுபிடித்தவர் வரலாறு

ஜெர்மனியின் விமானங்களைப் படுநாசம் செய்துவரும் பிரிட்டிஷ் எதிர்ப்பு விமானங்கள் மூன்று; அவை டிபியண்ட், ஸ்பிட் பயர், ஹரிக்கேன் என்பன. இவ்விமானங்கள் ஊக்கத்திலும் ஆக்கத்திலும் வேகத்திலும் தியாகத்திலும் சிறந்து நிற்கின்றன. சர்வதேசக் காட்சிகளில் இவ்விமானங்களில் சில பரிசும் பெற்றிருக்கின்றன!

#### டிபியண்ட்

இதில் இரண்டு பேர் உட்காரலாம். இறகுகளில் பல பீரங்கிகளிருக்கின்றன. விமான மோட்டியின் பின்புறம் துப்பாக்கி சுடுபவர் இருப்பார். அவர் தம் இருக்கையிலிருந்தவாறே எல்லாத் துப்பாக்கிகளையும் இயக்கமுடியும். இந்த ஜாதி விமானம் ஹரிக்கேனைவிடவும் ஸ்பிட் பயரை விடவும் வேகம் மிகுந்தது. இதனைக் கண்டுபிடித்தவர் ஜான் டட்லி நார்த். இப்போது இவரது வயது 47. சைடென்ஹாம் என்ற ஊரில் பிறந்தார். டெலிவிஷனைக் கண்டு பிடித்த பேர்டும் இவரும் சமீபமிருக்கும் வீடுகளில் பிறந்தவர்கள்.

#### ஸ்பிட்பயர்

இதனைச்செய்தவர் ரெஜினால்டு ஜோஸப் மிச்செல். அவர் ஓர் அச்சுத்தொழிலாளியின் புதல்வர். ஆதியில் ரயில்வேயில் வேலைக்கிருந்தார். அங்கிருக்கும்போதே விமானத்தில் நாட்டம் வர, விக்கர்ஸ் தொழிற்சாலையில் புகுந்தார். 1927-ல் அரச விமான சங்கத்திலிருந்து பரிசு பெற்றார். அவ்வருடம் வெனிஸில் நடைபெற்ற விமானப் போட்டியில் ஸ்பிட் பயருக்குப் பரிசு கிடைத்தது. நான்கு வருடத்திற்குப் பின் அதே விமானம் அபிவிருத்தி செய்யப்பட்டபோது மணிக்கு 407 மைல் சென்றது. பாவம்! ஜோஸப் மிச்சல் தம் விமான வெற்றியை நன்றாகப் பார்த்துக் களிக்குமுன் 42-ம் வயதில் காலமாகிவிட்டார்.

#### ஹரிக்கேன்

ஹரிக்கேன் விமானங்களைக் கண்டுபிடித்தவர் சிட்னிகாம். தற்போது இவர் வயது 42. இவர் பாடசாலையிலிருக்கும் போதே விமானப் பைத்தியம் இவரைப் பிடித்தது. 1911 ல் விண்ட்ஸர் மாடல் ஏரோபிளேன் சங்கத்தின் காரியதரிசியானார். அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைக் கடந்து செல்லும் முதல் விமானத்தைக் கட்டியவர் காம்தாம். இப்போது ஹாக்கர் விமானத் தொழிற்சாலையில் யோசனை சொல்பவராக விருக்கிறார்.

---

### இந்தியாவில் யுத்த தளவாட உற்பத்திசாலைகள்

யுத்த சப்ளைக்காக இந்தியாவில் என்னென்ன உற்பத்தி செய்யலாமென்று கணக்கிடுவதற்காக, அங்கங்கே எத்தனையெத்தனை உற்பத்திசாலைகள் இருக்கின்றனவென்பது கணக்கிடப்படும். இவ்வேலை ஐக்கிய மாகாணத்தில் ஏற்கனவே ஆரம்பமாய் விட்டது.

தற்காப்புப் படைக்காகத் தேவைப்படும் 40,000 சாதனங்களில் இந்தியா இன்று சுமார் 20,000 சாதனங்களை உற்பத்தி செய்து வருகிறது. இவற்றில் ஆயுதங்கள், வெடிமருந்து, உடை, தோல் சாமான்கள் முதலியன உள்படும். மீதமுள்ள 20,000 சாதனங்களையும் இங்கேயே தயாரிக்கப் பெருமுயற்சி நடக்கிறது.





## அமராவதிபுதூர் காந்தி சமதர்மப் பாடசாலை

### ஆண்டு விழாவும், காந்தி திருநாளும்

இப்பள்ளிக் கூடத்தின் 14வது ஆண்டு விழா புரட்டாசி மீ 14உ (29-9-40) நடைபெற்றது. காலையில் மகாத்மா காந்தியின் பட ஊர்வலம் நடைபெற்று காலை $10\frac{1}{2}$ மணிக்கு முடிந்தது. மாலை 3 மணிக்கு திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் இல்லத்திலிருந்து தலைவர் திரு. சர்தார் அ. வேதரத்னம் பிள்ளை M. L. A. அவர்களைப் பிள்ளைகளும் ஆசிரியர்களும் தேசிய கீதம் பாடி வரவேற்றார்கள். பள்ளிக்கூடத்தின் முன்னால் உள்ள கொட்டகையில் ஆண்டு விழா நடைபெற்றது. தலைவருக்கு, வரவேற்புப் பத்திரம் திரு. தி. நாராயணன் அவர்களால் படித்துக் கொடுக்கப்பட்டது. பள்ளிக்கூடத்தின் அறிக்கை வாசிக்கப்பட்டது. பள்ளிக் கூடத்தில் இப்பொது 84 பிள்ளைகள் படிக்கிறார்கள்; மூன்று ஆசிரியர்கள் கற்பித்து வருகிறார்கள். தலைவர் முன்னுரையில் பள்ளிக்கூடம் காந்தியடிகள் பெயரால் ஏற்பட்டு அவர் பிறந்த நட்சத்திரத்தன்று ஒவ்வொரு ஆண்டும் விழா நடப்பது கண்டு தான் மகிழ்வதாகவும், காந்தியடிகள் அரசியல் துறையில் எவ்வளவு தீர்க்க யோசனையுடன் வேலை செய்கிறாரோ அதேமாதிரி கல்வித் துறையிலும் ஒரு முறை வகுத்து அதை இந்தியா முழுவதும் முதல் தரமான திட்டமென்று போற்றப்படும்படி செய்திருக்கிறாரென்றும், இது தான் வார்தாக் கல்வித் திட்டம் என்று எங்கு பார்த்தாலும் பேசப் படுகிறதென்றும் மனிதன், வெறும் புஸ்தகத்தை மாத்திரம் படிப்பது கல்வி அல்லவென்றும், நமது சாதாரணத் தச்சன், கொல்லன், குயவன் இவர்களுக்குத் தெரிந்த அனுபவங் கூட B. A., M. A. படித்த பட்டதாரிகள் சொல்லத் தெரியாமல் திகைக்கிறார்கள் என்றும், இவர்கள் படிப்பு உபயோக மில்லை என்பது இவர்கள் வேலைக்குத் திண்டாடுவதையும் தற்கொலை செய்து கொள்வதையும் கினைத்துப் பார்த்தாலே தெரியும் என்றும், ஆகையால் பள்ளிக் கூடங்களில் குழந்தைகளுக்கு 'செய்து தெரிந்து கொள்' என்னும் முறையாகப் பாடம் கற்பித்தால் அவர்களுக்கு வாழ்நாளில் எதையும் செய்யும் திட்டமொன்று தோன்றி சுறு சுறுப்பு உண்டாகும் என்றும் கூறி நூல் நூற்றல் முதலிய தொழில்களையும் பள்ளிக்கூடத்தில் கற்பிக்க வேண்டும் என்றும் சொன்னார். பிறகு குழந்தைகளின் பாட்டு நடிப்பு கும்மி கோலாட்டத்துடன் பிள்ளைகளின் நடிப்பு முடிந்தது.

தேவகோட்டை நகரக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ D. R. அருணாசலம் அவர்கள் காந்தியடிகள் பெருமையை உலக முழுவதும் அறிந்திருக்கும் பொழுது நாம் மாத்திரம் அவரைப் பின்பற்றாமல் இன்னும் வாளாவிருப்பது அழகல்ல வென்றும், நாமெல்லோரும் கதர் ஆடை அணிந்து இந்தியாவின் நலனை விருத்தி செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். தலைவர் முடிவுரையில் காந்தியடிகளின் சரித்திரத்திலிருந்து காலத்தை அவர் எப்படி போற்றுகிறார் என்பதை, நடக்கப் போகும் பொழுது பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டி அளிப்பது, விடியற்காலம் 4 மணிக்குக் குளிரில் எழுந்திருந்து பிரார்த்தனை செய்வது, ராட்டை நூற்கும் பொழுது சந்தேகம் கேட்கிறவர்களுக்கு விடையளிப்பது, திங்கட்கிழமைகளில் விரதமிருப்பது முதலிய உதாரணங்களை யெடுத்துக் கூறி விளக்கினார். பொய் பேசாதிருத்தல், காலத்தைப் போற்றுதல், உயிர்களிடத்தில் அன்பாயிருத்தல், தன்னுடைய எதிரிகளும் போற்றும்படி அஹிம்சை வழியில் நடத்தல், இவைகளைப் போன்ற பல நற்குணங்களைப் பின்பற்றும் படி வேண்டிக் கொண்டார். வந்தன வாழ்த்துடன் கூட்டம் $5\frac{3}{4}$ மணிக்கு முடிந்தது. இரவு வெளியூர் அன்பர்களுக்கும் பள்ளி மாணவ மாணவிகளுக்கும் விருந்தளிக்கப்பட்டு 9 மணிக்கு "லீலா சேகர்" என்ற தேசிய நாடகத்தைப் பிள்ளைகளும் ஆசிரியர்களும் மூன்று மணி நேரம் பெரிய கூட்டத்தின் முன் நடித்துக் காட்டினர். இரவு 12 மணிக்கு நாடகம் முடிந்தது.

---

நம் செயல்களால்தான் நம் மொழிகளை மெய்ப்பிக்க வேண்டும்.

## காந்திஜி-வைஸ்ராய் சந்திப்பு

### பேச்சுரிமை அளிக்க வைஸ்ராய் மறுப்பு

### காரியக் கமிட்டியின் அவசரக் கூட்டம்

மகாத்மா காந்தி சிம்லா சென்று செப்டம்பர் 27-ம் தேதி பிற்பகல் வைஸ்ராயுடன் மூன்றரை மணி நேரம் சம்பாஷித்தார். 28, 29 தேதிகளில் மகாத்மா ஸிம்லாவிலேயே தங்கியிருந்து 30-ம் தேதி மாலை மீண்டும் வைஸ்ராயைச் சந்தித்துப் பேசினார்.

பேச்சு சுதந்திரம் வேண்டுமென்று மகாத்மா கேட்டார். ஆனால் இச்சமயத்தில் அதைக் கொடுப்பதற்கில்லை யென்று வைஸ்ராய் தெரிவித்துவிட்டார். இரண்டு பேர்களும் நடத்திய சம்பாஷணை சம்பந்தமாக இருவருக்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்து வெளியிடப்பட்டிருக்கிறது. அதிலிருந்து மகாத்மா கேட்டதும், வைஸ்ராய் அளித்த பதிலும் நன்கு புலனாகும். அதன் சுருக்கம் வருமாறு:—

#### காந்திஜிக்கு வைஸ்ராய் கடிதம்

இச்சம்பாஷணைகளில் நிலைமையை விரிவாக விவாதித்தோம். முக்கியமாக யுத்த காலத்தில் பேச்சு சுதந்திரத்தைப்பற்றி விவாதித்தோம். பிரிட்டிஷ் சர்க்காருக்கு, யுத்தமுயற்சிகளில் எத்தகைய சங்கடத்தையும் உண்டாக்கக் கூடாதென்பதை அதிகக் கவலையுடன் தெரிவித்தீர்கள். ஆயினும், இந்திய தேசீய காங்கிரசும் பொது ஜனங்களும் அவர்கள் கூறுவது அஹிம்சைக்கு மாறானதா யில்லாதிருக்குமானால் யுத்த முயற்சி சம்பந்தமாகத் தங்களுடைய கருத்தை யெடுத்துக்கூற உரிமை வேண்டுமென்றும் கூறினீர்கள். யுத்த வேலையில் ஈடுபட்டிருப்பவர்களை அதைச் செய்ய வேண்டாமென்று நீங்கள் தூண்டமாட்டீர்கள். ஆனால் இந்தியாவை ரத்தஞ் சிந்துவதில் கொண்டுபோய்விடும் எத்தகைய யுத்த முயற்சிக்கும் உதவி செய்ய வேண்டாமென்று இத்தேசத்திலுள்ள சகல ஜனங்களையும் கேட்டுக்கொள்ளப் பிரசங்கங்களைச் செய்ய காங்கிரஸ்காரர்களுக்கும் மற்றவர்களுக்கும் உரிமையிருப்பது முக்கியம் என்றீர்கள். பிரிட்டனின் யுத்த முயற்சிக்கு இடைஞ்சலை உண்டாக்கக் கூடாதென்பதில் காங்கிரஸ் அதிக ஆவலுடனிருக்கிறதென்பதற்கும் நீங்கள் கூறுவது விரோதமாயிருக்கும். இந்தியாவின் நன்மையைப் பொறுத்தவரையில், முக்கியமாக இந்த நெருக்கடியான சமயத்தில் நீங்கள் கேட்கும் பேச்சு சுதந்திரம் அதிக விரிவானதாயிருப்பதால் அது யுத்த முயற்சிக்குத் தடையாகவே யிருக்குமாகையால் அதை அனுமதிப்பதற்கில்லை யென்று கூறினேன்.

#### வைஸ்ராய்க்கு மகாத்மா பதில்

நீங்களும் இந்தியா மந்திரியும் இந்தியா முழுவதுமே வலிய யுத்தமுயற்சிக்கு உதவி செய்து வருகிற தென்று கூறியிருக்கிறீர்கள். இந்தியாவிலுள்ள பெரும் பான்மையான மக்களுக்கு இதில் சிரத்தை யில்லை யென்பதை எடுத்துக் கூறவேண்டியது அவசியமாகிறது. நாஜீயத்திற்கும், இந்தியாவை ஆளும் இரட்டை யதேச்சாதிகாரத்திற்கும் எத்தகைய வித்தியாசமுமிருப்பதாக அவர்கள் கருதவில்லை. இந்தியாவுக்கும் தன்னிஷ்டப்படி நடந்து கொள்ளும் உரிமை அளிக்கப்பட்டிருக்குமானால், பேச்சுரிமை கொடுக்கப்பட்டிருந்தால், இந்தியா, பிரிட்டனுக்குச் சாதகமாக வேண்டிய காரியங்களைச் செய்திருக்கும்; பிரிட்டனுக்கும் ஒழுக்கத்தைப் பற்றிய கௌரவமும் கிடைத்திருக்கும்.

பிரிட்டிஷ் சர்க்காருக்கு அதன் யுத்த முயற்சியில் எத்தகைய தர்ம சங்கடத்தையும் உண்டாக்காமலிருக்க வேண்டுமென்று தான் காங்கிரஸ் விரும்புகிறது. அதிக நெருக்கடி யுண்டாகியிருக்கும் இச்சமயத்தில், தனது கொள்கையைத் தானே மறுத்துக் கொண்டு காங்கிரஸ் தனது கொள்கையை விட்டுக் கொடுக்க முடியாது. காங்கிரஸ் சாவதாயிருந்தாலும் தனது கொள்கையைப் பிரகடனப்படுத்துவதில் தான் அது சாகவேண்டும்.

#### அடுத்தபடி என்ன?

மகாத்மா காந்தி அன்றிரவே டில்லிக்குப் புறப்பட்டு செவ்வாய்க்கிழமை அதிகாலை புது டில்லி போய்ச் சேர்ந்தார். டில்லிக்குப் புறப்படு முன், பத்திரிகை நிருபர்கள் "அடுத்தபடியாகச் செய்யப் போவதென்ன?" என்று கேட்டபோது, 'கடவுளுக்குத் தான் தெரியும்; கடவுள் காட்டுவதே நமக்கு வழி' யென்று பதிலளித்தார்.

#### காரியக் கமிட்டிக் கூட்டம்

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அவசரக் கூட்டமொன்று அக்டோபர் 11-ம் தேதி வார்தாவில் கூட்டப்பட்டிருக்கிறது.

#### எதிர்பார்த்ததே!

சிம்லா சம்பாஷணையின் முடிவு எதிர்பார்த்ததே யென்று, காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல்கலாம் ஆஸாத் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்.

---

### வைஸ்ராய் யோசனையை முஸ்லிம் லீகும் நிராகரித்தது

புது டில்லியில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் காரியக் கமிட்டி, வைஸ்ராயின் யோசனையை அங்கீகரிக்க முடியாதென்று ஏகமனதாகத் தீர்மானித்திருக்கிறது. கவர்னர் ஜெனரல் நிர்வாக சபையில் இருவரைச் சேர்த்துக்கொள்வதால், மத்திய சர்க்காரில் போதுமான அதிகாரம் கிடைத்துவிடாதென்று லீக் கருதுகிறது. இத் தீர்மானத்தை லீக் கவுன்சிலும் அங்கீகரித்துவிட்டது. இக்கூட்டத்தில் லீக் தலைவர் ஜனாப் ஜின்னா வெளியிட்ட அறிக்கையில், பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரத்தை விட்டுக்கொடுக்க விரும்புவதாகத் தெரியவில்லை யென்றும், ஒரு தனி நாட்டினராக விளங்கும் 9 கோடி முஸ்லீம்களை அலட்சியம் செய்வதாகவே தெரிகிறதென்றும், வைஸ்ராய் பற்பல கட்சித் தலைவர்களுடனும் தொடர்ந்து கலந்து பேசி வருவதைப் பார்த்தால் பிரிட்டன் இன்னும் எஜமான ஸ்தானத்திலிருந்து தம்மை வேலையாளாகக் கருதவே விரும்புவதாகத் தெரிகிறதென்றும், இந் நிலைமைக்கு நாம் உட்பட முடியாதென்றும் குறிப்பிட்டார். மேலும் அவர் கூறியதாவது:

யுத்தத்தால் ஏற்படக்கூடிய அபாயங்கள் இன்னவை யென முஸல்மான்களுக்கு நன்கு தெரியும். அவர்கள் தங்கள் கடமையைக் கருதியே யுத்த விஷயத்தில் சர்க்காருக்கு எல்லாவித உதவிகளும் செய்ய ஆவலுள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்களது உதவி உண்மையில் பலன் தரத்தக்கதாக இருக்க வேண்டுமானால் முஸ்லிம் லீகுக்கு மத்திய சர்க்காரிலும் மாகாண சர்க்கார்களிலும் அதிகாரம் அளிக்கப்பட வேண்டும். சர்க்காருடன் பல நாள் கலந்து பேசிய பிறகு அவர்கள் மத்திய சர்க்காரில் லீக் பிரதிநிதிகளுக்கு இடம் கொடுக்க இணங்கினர்களே யொழிய காங்கிரஸ் மாகாணங்களில் இடம் கொடுக்க இணங்கவில்லை.



## கலைச் சொல்லாக்கக் கமிட்டி

### சிபார்சுகளின் விவரம்

மாகாணங்களில் எல்லா பாஷைகளுக்கும் சாஸ்திரம், கலைகள் இவை சம்பந்தப்பட்ட மட்டில் ஒரேமாதிரியான சொற்களை எல்லோரும் உபயோகிப்பதற்கு வழிதேடவும் சிபார்சுகள் செய்யவும் மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் தலைமையில் சென்ற ஜூன் மாதம் சென்னை சர்க்கார் ஒரு கமிட்டியை அமைத்தனர். இதில் ஸ்ரீ வி. ஆர். செட்டி, கல்வி இலாகா டயரக்டர் ஸ்ரீ ஸ்டாதம் முதலிய 14 பேர் அங்கத்தினராயிருந்தனர். இக்கமிட்டியார் தற்போது தங்கள் சிபார்சுகளைச் சர்க்காருக்கு அறிவித்துவிட்டனர். கமிட்டியின் சிபார்சுகளைச் சர்க்கார் அங்கீகரித்து, செல்வ நிலை இடம் கொடுக்கும் போது, கமிட்டி சிபார்சு செய்தன்னபடி பல்வேறு சப் கமிட்டிகளை அமைக்க உத்தேசித்திருப்பதாகத் தெரிவித்திருக்கின்றனர். கமிட்டியாரின் சிபார்சுகளில் முக்கியமான சில வருமாறு.—

தென் இந்திய பாஷைகளிலுள்ள கீழ்தர மத்திய வகுப்புகளில் அமுலிலிருக்கும் (அந்நிய பாஷைச் சொற்களுக்குப் பிரதியான) சொற்கள் ஸ்திரமாகி விட்டபடியால் கல்வி சம்பந்தப்பட்ட மட்டில் அவற்றை அப்படியே வைத்திருக்கலாம். இயற்கையைப்பற்றிய சொற்பெயர்களையும் இப்போது வழங்கி வருவனவற்றையே வைத்துக்கொள்ளலாம். பொருளின் தன்மைகள், திறமை, பாடப் பெயர்கள் முதலியவற்றிற்கான பதங்களை எல்லா பாஷைகளுக்கும் பொதுவான பதங்களாகத் தயாரிக்கவேண்டும். திராவிட பாஷைகள் சம்பந்தப்பட்ட மட்டில் சமஸ்கிருதத்தை அடிப்படையாகவும் உருதுவுக்குப் பெர்ஷிய அரபுப் பாஷைகளை அடிப்படையாகவும் கொள்ளலாம். இத்தத் தொகுதி சொற்பமாகவே யிருக்கும்.

மேலே குறிப்பிட்ட இரு இனங்களையும் சேராத பதங்களை அப்படியே ஆங்கிலப் பதங்களாக் எடுத்துத் தென்னிந்திய பாஷைகளில் எழுதிவிட வேண்டும். கணித சாஸ்திரப் புத்தகங்களில் காணப்படும் அரபு எண் வரிசைகளையும், குறியீடுகளையும் இப்பொழுது உபயோகிப்பதுபோல் அப்படியே உபயோகித்துக் கொள்ள வேண்டியதுதான்.

தென் இந்திய பாஷைகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு கமிட்டி நியமித்து அந்தந்தக் கமிட்டிகள் சிபார்சுகளை வைத்துக் கொண்டு இந்தப் பொதுக் கமிட்டி தனது சிபார்சுகளை முடிவு கட்டவேண்டும்.

இறுதியாகத் தயாரிக்கப்படும் கலைச் சொற்கள் வரிசையையே பாடப் புத்தக ஆசிரியர்களும், பிரசுர கர்த்தர்களும், பரிசோதகர்களும் உபயோகிக்க வேண்டுமென சர்க்கார் உத்தரவிட வேண்டும். ஆனால் ஐந்து வருஷத்திற் கொருமுறை இந்த ஜாப்தா திருத்தியமைக்கப் பெற வேண்டும். ஆங்கிலச் சுருக்கெழுத்து, ஆங்கில டைப்ரைட்டிங் பயிற்சி இவை ஆங்கிலத்தின் மூலமே நடக்க வேண்டுமென்று கமிட்டி கருதுகிறது.

---

### சென்னை மாகாணத் தமிழர் ஏழாவது மாநாடு

இம்மாநாடு சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் 1940 அக்டோபர் மீ 19, 20 சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் திருநெல்வேலியில் நடைபெறும். இந்து அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தின் தலைவர் திவான்பகதூர் T. M. நாராயணசாமிப் பிள்ளையவர்கள் எம். ஏ., பி. எல். தலைமை தாங்க அன்புடன் இசைந்திருக்கிறார்கள். தமிழ் வளர்ச்சிபற்றிய பொருள்கள் மட்டும் ஆராயப்பெறும். தீர்மானங்கள் அனுப்பவிரும்பும் அன்பர்கள் அவற்றை 15-10-1940க்குள் திருவாளர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், அமைச்சர், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம், சங்கரநயினார் கோவில் என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டுமென்று அமைச்சர் அறிவிக்கிறார்.

# குமரன்

காரைக்குடி
விக்கிரம-ஷு புரட்டாசி-மீ 18உ

## சண்டையின் போக்கு

சண்டை ஒழிவதற்கான குறிகள் எதுவுமில்லை. வரவர பலப்படுகிறது. போர்த் தீ பூலோகம் முழுமையும் பற்றிப் பரவிவருகிறது. ஜெர்மனிதான் தீ வைத்து ஊதி வளர்க்கிற தென்பதில்லை, இடாலி தோள் கொடுத்துப் போரை வளர்க்கிறதென்று மட்டும் கூறமுடியாது. ஐரோப்பிய நாடுகள் அத்தனையும் போர்ச் சுழலில் அகப்பட்டுக் கொண்டுவிட்டன. ஆசியாவில் இந்தத் தீ பரவாதென்று கருதப்பட்டது. ஆசியா கண்டத்திற்கு ஏகபோக சக்ராதிபத்தியம் பெற ஜப்பானுக்குத்தான் உரிமையுண்டென்று ஜப்பான் கிளம்பி யிருக்கிறது சண்டை துவங்கப்பட்ட நாளிலிருந்தே ஜப்பானின் நோக்கம் நேரானதாக இருக்கவில்லை. சீனவுடன் போர் தொடுத்துக் கொடுமை செய்து சீன நாட்டைச்சீரழித்து வருகிறது. ஹாலந்து வீழ்ச்சியடைந்ததும் டச்சுத் தீவுகள் தனது ஆதிக்கத்துக்குட்பட வேண்டுமென்ற கருத்துடன் ஜப்பான் ஆர்ப்பாட்டம் செய்தது. பிரான்ஸ் வீழ்ந்ததும் இந்தோசைனு தனக்கு உரிமையுடையதென்று பாத்தியம் கொண்டாட முற்பட்டு நிற்கிறது.

பிரிட்டனுக்கும் ஜப்பானுக்கும் இடையே உறவு ஏற்பட்டிருக்கிறது. அதற்கிடையில் எந்தவிதமான தகராறு மேற்படவில்லை. சீனவில் ஏற்பட்ட பல சந்தர்ப்பங்களில் பிரிட்டன் ஜப்பானுக்கு அனுசரணையாகவே விட்டு விலகிக் கொடுத்திருக்கிற .தென்னலாம். பர்மா வழியாக சீனவுக்குச் செல்லும் பாதையை ஜப்பானின் சிபார்சுக்காகவே அடைக்க ஒப்புக் கொண்டது. இப்படிச் செய்வது நியாயமல்லாத செய்கையென்று சீன எவ்வளவு தடுத்துப் பேசியும், பிரிட்டன் செவிசாய்க்காமல் ஜப்பானுக்குப் பரிந்து அச்செய்கையைச் செய்தது. இப்படி ஜப்பானுக்கு சாதகமாக பிரிட்டன் என்ன செய்தபோதிலும் ஜப்பான் தனது நிமிரான போக்கைத் தளர்த்தவில்லையென்று கூறும்படி அதனுடைய செயல்கள் போய்க் கொண்டிருக்கின்றன வென்னலாம். ஐரோப்பாவில் ஒரு பெரிய யுத்தம் கொடுமையாக நடந்து கொண்டிருக்கும் போது கிழ்த்திசையில் ஒரு பெரிய யுத்தத்திற்கு இடமேற்பட விடவேண்டாமென்றே பிரிட்டன் நிதானித்து விட்டுக் கொடுத்து வந்திருக்கிறது போலும். அப்படிச் செய்துவந்ததை ஜப்பான் எப்படிக் கருதிற்றே? விட்டுக் கொடுக்கக் கொடுக்கத் தன்னுடைய பராக்கிரமம் பெரிதாகிவிட்டதாக ஜப்பான் கருதிவிட்டது போலும்.

ஜெர்மனியும் இடாலியும் ஜப்பானுடன் புதிய உறவு ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிற செய்தி வெளியாகியிருக்கிறது. இதனுல் பெரிய பாதகமொன்றும் ஏற்பட்டு விடப் போவதில்லை. இதைக்கண்டு பிரிட்டன் அஞ்சிவிடப் போகிறதென்று சொல்ல முடியாது. என்னவானுலும் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் கல்லுப்போ லிருந்து காரியங்களை நடத்தும் ஆற்றல் பெற்றிருக்கிருர்களென்பதை நாள்தோறும் நாம் அறிந்து வருகிறேம். இந்த மூவர் ஒப்பந்தம் அமெரிக்காவை உறுதிப்படுத்தவே உபயோகமாகப் போகிறது. இதனையறிந்த பிறகும் அமெரிக்கா சும்மா இருக்க முடியாது. ரஷ்யா என்ன செய்யுமென்பதும் கூர்ந்து நோக்கத்தக்கதாக இருக்கிறது. இந்த ஒப்பந்தமும் ஜப்பானின் போரசையும் சேர்ந்து கிழக்கே தீமூட்டுமோ என்று சந்தேகப்பட இடமிருக்கிறது.

கிழக்கே உள்ள பிரிட்டிஷாரின் தீவுகள் அமெரிக்காவுக்குக் கீழே விடப்பட்டு ஜப்பானுக்குப் பதில் சொல்லக்கூடுமென்ற பேச்சு ஒருவேளை இந்நிகழ்ச்சியிலிருந்து உருவாகுமோ வென்ற ஐயமும் ஏற்படுகிறது. எப்படியானுலும் சண்டை கண்டம் கண்டமாகப் பரவி ஓங்குகிறதேயன்றிக் குன்றவடையவில்லையென்பது கவனிக்கத்தக்கது. ஐரோப்பா ஆப்பிரிகா கண்டங்கள் பற்றியெரிகின்றன. ஆசியாவிலும் சீனவில் ஜப்பான் வைத்த தீ ஆசியா முழுமையும் பரவுமோ என்னவோ? இங்கே அமெரிக்கா தலையிட்டால் இரண்டு கடல் போரை அது நடத்த வேண்டியிருக்குமென்று ஜப்பானியர் கூறுகின்றனர். இது மெய்யானல் அமெரிக்கா கண்டமும் யுத்தத்தில் மாட்டிக் கொள்ளக்கூடும். இதன் முடிவென்ன? பிறகு பஞ்சாயம் பேச உலகில் ஆளில்லை. ஒரே போக்குதான். எங்காவது போய் எப்படியாவது ஓரிடத்தில் போர் முடியும்போலிருக்கிறது.

## உள்ளூர்ச் செய்திகள்

### நவராத்திரி விழா

நேற்று புதன்கிழமை நவராத்திரி விழா ஆரம்பமாயிற்று. நகரிலுள்ள கோயில்களிலெல்லாம் வழக்கம்போல் இவ்வருஷமும் கொலு அலங்காரங்களுடன் விழா நடத்தப்பெறும். நேற்று மாலை திலுக்கியெடுப்பு நடைபெற்றது.

### சத்தியாக்கிரஹக் கமிட்டி

26-9-40 மாலை 5-மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் கமிட்டியின் சாதாரணக் கூட்டம் தலைவர் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீ N. R. பத்மநாபன் ஸ்ரீ சுவாமி சிவப்பிரஸாத் ஆகிய இருவரையும் கமிட்டி மெம்பர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டது. ஸ்ரீ பனை. மெ. மெ. பழ. வெங்கிடாசலம் செட்டியார் காரியதரிசியாகவும், ஸ்ரீ N. R. பத்மநாபன் உதவிக் காரியதரிசியாகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இதுவரை 37 பேர் சதயாக்ரகிகளாகப் பதிவு செய்திருக்கின்றனர்.

### ஹிந்திப் பரிக்ஷை முடிவு

தக்ஷிண பாரத ஹிந்திப் பிரசார சபையில் ஆகஸ்ட் 11உ நடத்தப்பட்ட பரீக்ஷைகளில் காரைக்குடியில் 28 பேர் கலந்துகொண்டனர். 17 பேர் தேர்ச்சியடைந்தனர். காங்கிரஸ் மாளிகையில் படித்த 8 பேர்களில் 5 பேர் தேர்ச்சிபெற்றனர். மொத்தம் தேர்ச்சிபெற்ற 17 பேர்களில் பிராத்மிக்கில் முதல் வகுப்பில் இருவரும், இரண்டாவது வகுப்பில் அறுவரும், மத்யமாவில் இரண்டாவது வகுப்பில் எழுவரும், ராஷ்டிர பாஷா இரண்டாவது வகுப்பில் இருவரும் தேர்ச்சிபெற்றுள்ளனர்.

### காரைக்குடியில் ஹிந்துஸ்தானி விழா

சென்ற செவ்வாய்க்கிழமை ஹிந்துஸ்தானி விழா கொண்டாடப்பட்டது. மாலை 5 மணிக்கு காங்கிரஸ் மாளிகையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு ராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கத்திற்கு வந்து சேர்ந்தது. ஹிந்தி உபாத்தியாயர் ஸ்ரீ ராமகிருஷ்ண ராஜு பிரேரிக்கஸ்ரீ ராம. சிதம்பரம் செட்டியார் தலைமைவகித்து ஹிந்தியின் அவசியத்தை எடுத்துச் சொல்லி தினசரி வாழ்க்கைக்கு அவசியமான சில ஆயிரம் சொற்களடங்கிய தொகுப்பு ஒன்றைத் தயாரித்து அதனைப் பொது ஜனங்கட்குக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்று தெரிவித்தார். கும்பகோணம் ஸ்ரீ எஸ். ஏ. ரஹீம் பேசுகையில், துருக்கியின் முன்னேற்றத்திற்கு அங்கு செய்யப்பட்ட பாஷா சீர்திருத்தமே காரணமென்றும், ஹிந்தியைப் படிக்கும்படி சட்டம் செய்யவேண்டியது கூட அவசியமென்றும், ஒரு பொதுமொழிக்கு அவ்வளவு தேவையுண்டென்றும் குறிப்பிட்டார். ஸ்ரீ சா. கணேசன் பாஷையின் பாகுபாட்டையும், ஹிந்தியைப் பொதுமொழியாக்க வேண்டுவதன் அவசியத்தையும் புள்ளி விவரங்களோடு விளக்கினர். ஹிந்தி உபாத்தியாயர் ஸ்ரீ தங்கப்பன் நன்றி கூறினர்.

## பர்மாவில் இந்தியருக்கு எதிர்ப் பிரசாரம்

### பேதப்படுத்தும் வகுப்புவாதச் சட்டங்கள்

சென்னை 'மெயில்' பத்திரிகையில் ஒருவர் எழுதியுள்ள கட்டுரையில் அடியில் வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது:—

இந்தியக் கடைக்காரர்களையும் வர்த்தகர்களையும் மறியல் செய்வதும், பகிஷ்கரிப்பதுமான பிரசாரம் தொடர்ந்து ஆனல் வரவர ஊக்கங்குன்றி நடந்து வந்திருப்பதாக பர்மாவிலிருக்கும் இந்திய சர்க்கார் ஏஜண்டு தமது 1939-ம் வருட அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர். பத்திரிகைக் கட்டுரைகளும் பேச்சுகளும் இன்னும் எதிர்ப் பிரசாரம் செய்துவருகின்றன.

பல சட்டங்கள் கொண்டுவரப்பட்டுச் சில நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. இவற்றுள் சில, நிறைவேறிவிட்ட நிலப்பராதீனச் சட்டம் (ஆனல் அமுலில்லை), நிலக் கொள்முதல் மசோதா, நிலக் குடிவாரச் சட்டம் ஆகியவை அந்நாட்டில் இந்திய நிலச்சுவான்தார்களாகவும் லேவாதேவிக் காரர்களாகவுமுள்ள செட்டியார்கள் சமூகத்தைப் பெரிதும் பாதிக்கின்றன.

இந்தியருக்கு முக்கியமான மற்றொரு மசோதா ரங்கூன் முனிசிப்பல் மசோதாவாகும். கார்ப்பரேஷனில் வகுப்பு முறையை இது அமுலுக்குக்கொண்டு வருகிறது. மொத்த மெம்பர்களில் நேர்பகுதிக்குக் குறையாதவர் தேர்தெடுக்கப்பட்ட பர்மியர்களாக இருக்க வேண்டுமென்று இம்மசோதா உத்தேசிக்கிறது. நகரில் பெரும் பாகத்தினருக்கு மேல் இந்தியர் இருக்கின்றனர். மொத்த வரியில் 55 சதமானம் இந்தியர் கொடுக்கின்றனர். பிரதிநிதிகள் சபை இதை நிறைவேற்றிவிட்டது. செனட்டின் தனிக் கமிட்டி இதைப் பரிசீலனை செய்து வருகிறது.

## முத்துப்பட்டணத்தில் தபாலாபீஸ் இல்லை

(ஒரு நிருபர்)

காரைக்குடி முத்துப்பட்டணத்தில் 1-10-40 முதல் ஒரு கிளை தபாலாபீஸ் திறக்கப்படுமென்று அறிவிக்கப்பட்டிருந்தது. அதன்படி எல்லா சாமான்களும் தயார் செய்யப்பட்டு வந்துவிட்டன. திறப்புவிழா சம்பந்தமாக முத்துப்பட்டணம் நகரத்தார் பேரால் அழைப்பும் அச்சிட்டுப் பொது ஜனங்கட்கு வழங்கப்பட்டிருந்தது. திறப்பாளர் புதுக்கோட்டை டிவிஷன் போஸ்டல் இன்ஸ்பெக்டர் திரு சீனிவாசலு நாயுடு B. A. அவர்களும் வந்திருந்தார்கள். ஆனல் எதிர்பாராத வண்ணம் குறித்தபடி தபாலாபீஸ் திறக்கப்படவில்லை. முதல் நாளிரவு சென்னை போஸ்ட்மாஸ்டர் ஜெனரலிடமிருந்து கிளை ஆபீஸ் திறப்பதை நிறுத்திவைக்கும்படி தந்திச் செய்தி கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது.

பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் சர்ச்சில், விமானப் படையெடுப்பின் போது பதுங்குமிடங்களில் தங்க மறுக்கிருராம். இரவில் தமது காரிலே வெளியே போக வேண்டுமென்று பிடிவாதமாக வற்புறுத்துகிருராம். இதனுல் அவரது சகாக்களுக்கு அவரைப்பற்றி அதிகக் கவலை ஏற்பட்டிருக்கிறதாம்.

## 12-வது காசி யாத்திரை

இக்கர் ஸ்ரீ பெரி. க. காசிச் செட்டியார் பனிரெண்டாவது முறையாக 30-9-40ல் ஸ்ரீ காசிக்குப் புறப்பட்டுப் போயிருக்கிருர்கள். விக்கிரம ஷு புரட்டாசி மீ 27உ (12—10—40) சனிக்கிழமையன்று ஸ்ரீ காசிச் செட்டியார் அவர்களுக்கு ஸ்ரீ காசியில் ஷஷ்டி யப்த பூர்த்தி சாந்திக் கல்யாணம் சிறப்பாக நடைபெறும் என்று ஒரு நிருபர் எழுதுகிருர்.

## ஜர்மனி ருஷ்யா மீது படையெடுக்கும்?

### அதற்கு முன் பிரிட்டனுடன் சமாதானம்

1941ல் ஜர்மனி ருஷ்யாமீது படையெடுக்குமென்று நாஸி வட்டாரங்கள் கருதுவதாக ஒருவர் அமெரிக்கப் பத்திரிகையில் எழுதியிருக்கிருர். ஜர்மனி பிரிட்டனை ஜயித்த பிறகோ அன்றி பிரிட்டனுடன் சமாதானம் செய்து கொண்டபிறகோ, உக்ரேன், பக்கூ எண்ணெய் பிரதேசங்களையும் முந்திய பால்டிக் நாடுகளையும் ஒன்று ஸோவியத் தானுக ஜர்மனிக்குக் கொடுக்குமாம்; அல்லது ஜர்மனி பிடுங்கிக் கொள்ளுமாம். இவ்வாறு ஜர்மனியில் பொறுப்புள்ள நாஸி அதிகாரிகள் ரகசியமாகப் பேசிக் கொள்கிருர்களாம்.

### ஜெர்மனி—இத்தாலியுடன் ஜப்பான் ஒப்பந்தம்

ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் இம்மூன்று நாடுகளும் ஒரு ராணுவ, அரசியல் பொருளாதார ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கின்றன. 10 வருஷ காலம் நீடித்திருக்கும் இவ்வொப்பந்தம் செப்டம்பர் 27ந் தேதி பெர்லினில் கையெழுத்திடப்பட்டது. ஜர்மனி—பிரிட்டன் யுத்தத்திலோ சீன—ஜப்பான் யுத்தத்திலோ இதுவரைச் சேராத ஒரு நாடு இந்த மூன்று தேசங்களில் ஏதாவ தொன்றைத் தாக்குமானல் இம்மூன்று நாடுகளும் ராணுவ, பொருளாதார, அரசியல் துறைகளில் பரஸ்பர உதவி செய்ய ஒப்புக் கொண்டிருப்பது இவ்வொப்பந்தத்தின் முக்கிய ஷரத்தாகும்.

### பிரிட்டனைத் தாக்குவதை ஜர்மனி விட்டுவிடுமாம்

ஜர்மானியர் பிரிட்டனைத் தாக்குவதைச் சீக்கிரத்தில் விட்டு விட்டு ஜிப்ரால்டரை முற்றுகை போட ஏற்பாடு செய்வார்களென்று ஹெரால்டு டிரிபியூன் பத்திரிகையின் வாஷிங்டன் நிருபர் தெரிவித்திருக்கிருர்.

### காந்தி உருவச் சிலை திறப்பு

ஓமலூர் தாலூகா இரண்டாவது மகாநாடு குளத்தூரில் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் தலைமையில் நடைபெற்றது. திருச்சி ஸ்ரீமதி நீலாவதி மகாநாட்டைத் திறந்து வைத்தார். சேலம் ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ நாச்சியப்ப கவுண்டர் மகாத்மா காந்தி உருவச் சிலையைத் திறந்து வைத்தார்.

### டில்லியில் காந்திஜி

#### 2000 ரூபாய்க்குக் கதர் விற்ருர்

வைஸ்ராயைப் பார்க்க சிம்லா செல்லும் வழியில் மகாத்மா காந்தி புது டில்லியில் பிர்லா மாளிகையில் நடந்த நூல் நூற்றல் போட்டியைப் பார்வையிட்டார். பின் கதர் சீட்டுகளை விற்ருர். இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் அவர் கதர் விற்றதாகத் தெரிகிறது.

### மலாக்காவில் பாரதி தினம்

மலாக்கா செட்டியார்கள் இளைஞர் சங்கச் சார்பில் செட்டியார்களின் வர்த்தக சங்க மேல்மாடியில் 11-9-40 மாலை மணி 5 க்கு அழ. அழகப்ப செட்டியாரவர்களின் தலைமையின் கீழ் "பாரதி தினம்" விமரிசையாய்க் கொண்டாடப்பெற்றது. அவ்வமயம் ஸ்ரீ மு. சின்னய்யா, ராம. மாணிக்கம், சுப. மகாலிங்கம் முதலிய பல அன்பர்கள் பாரதியின் வாழ்க்கை வரலாற்றை விரிவாகச் சொற்பொழிவு ஆற்றினர்.

### ஸ்ரீ ராய் விலக்கப்பட்டார்

பண்டித ஜவாஹர்லால் நேரு தலைமையில் கூடிய ஐக்கிய மாகாணக் காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி, ஸ்ரீ எம். என். ராயை ஒரு வருஷத்துக்குக் காங்கிரசிலிருந்து விலக்கத் தீர்மானித்திருக்கிறது. அவர் நாலணாச் சந்தாதாராகக் கூட இருக்க முடியாது.



## ரயில்வே வாகன்கள் பறந்தன!

### பேர்லின் நகர் கடுமையாகத் தாக்கப்பட்டது

செப்டம்பர் 23-ந் தேதி இரவு பலத்த பிரிட்டிஷ் கோஷ்டி பர்லினைத் தாக்கியது. 80 மைலுக்கப்பாலும் தெரியக் கூடிய பெரிய தீ விபத்துகள் உண்டு பண்ணப்பட்டன. ரயில்வே ஸ்டேஷன்களிலும் தொழிற்சாலைகளிலும் குண்டுகள் போடப்பட்டன. சேதம் அதிகம் ஏற்பட்டிருக்குமென நம்பப்படுகிறது. விஸ்மாரிலுள்ள விமானத் தொழிற்சாலைகள், கீல் கால்வாயிலுள்ள மதகுகள், பல கப்பல் கட்டு மிடங்கள், படகுத் துறைகள் எல்லாம் தாக்கப்பட்டன. சுமார் 4 மணி நேரம் பர்லின் பலமாகத் தாக்கப்பட்டது. 24உ கிரிஸ் நெஸ் முனைக்கு எதிரில் கடலில் சென்று கொண்டிருந்த 5 ஜர்மன் மோட்டார் டார்ப்பிடோ படகுகள் மீது பிரிட்டிஷ் விமானங்கள் குண்டுகளை வீசின. பிரஸ்டிலுள்ள கடற்படை மூலஸ்தானம் தாக்கப்பட்டது. பிற்பகல், இங்கிலீஷ் கால்வாயில் ஜர்மன் சுரங்கவாரிக் கப்பல்கள் தாக்கப்பட்டன. கலே படகுத் துறைகள் ஏழு மணி நேரம் தாக்கப்பட்டன.

25உ அதிகாலை பர்லின் 3 மணி நேரம் பிரிட்டிஷ் விமானங்களால் தாக்கப்பட்டது. ஒரு ஜர்மன் சப்ளைக் கப்பல் மூழ்கடிக்கப்பட்டது. இரவிலும் பர்லின் நெடு நேரம் தாக்கப்பட்டது. ஜர்மன் ஆக்கிரமிப்புக்குள்பட்ட படையெடுப்பு மூலஸ்தானங்களும் தாக்கப்பட்டன. 25உ இரவு 5 மணி நேரம் பிரிட்டிஷ் விமானங்கள் பர்லினைத் தாக்கின. 26உ அதிகாலை 10 மணிவரைப் பர்லின் தாக்கப்பட்டது. ராணுவ முக்கியம் வாய்ந்த இடங்களெல்லாம் தாக்கப்பட்டன. பல மின்சார உற்பத்திகூடங்கள் சேதமுற்றன. ரயில்வே ஜங்ஷன்கள் தாக்கப்பட்டன. ரூடர் ஸ்டிராப்பிலுள்ள யுத்த தளவாடச் சாலைமீது குண்டுகள் வீசப்பட்டதால் தீ விபத்து ஏற்பட்டது.

26உ அதிகாலைபிரஞ்சுக் கால்வாய்க்கரை துறைமுகங்கள் மீது பிரிட்டிஷ் விமானங்கள் குண்டுகளை வீசின. டங்கிர்க் முதல் புலோன் வரையிலுள்ள கரை எரி வெடிகளின் வீச்சால் தீப்பற்றி யெரிந்தது. பிரஸ்டில் பலத்த வெடி விபத்தால் ரயில்வே டிரக்குகள் ஆகாயத்தில் தூக்கி யெறியப்பட்டன. 25உ இரவு கீல் கால்வாயிலுள்ள கடற்படை கட்டுமிடம் தாக்கப்பட்டது. 26உ இரவு பிரிட்டிஷ் விமானங்கள் கால்வாய்க் கரைத் துறை முகங்களையும் கீல் கால்வாயிலுள்ள கப்பல்களையும் பலமாகத் தாக்கின. லாஹாவ்ரே என்ற துறைமுகம் நீண்ட நேரம் தாக்கப்பட்டது.

27உ பிரிட்டிஷ் விமானப் படை ஏராளமான குண்டுகளை பிரஞ்சுக் கடற்கரைப் பிரதேசத்தில் வீசியதால், எஃகு, அலுமினியம், ரோலிங் ஆலைகள் நாசமாயின. அட்லாண்டிக் கரையிலுள்ள ஒரு பிரஞ்சுத் துறைமுகம் பலமாகத் தாக்கப்பட்டது. பெரிய துறைமுகங்களும், தளங்களும் நாசமாயின.

28, 29 தேதி இரவுகளில் பிரிட்டிஷ் விமானங்கள் பெர்லினை இரு முறை தாக்கின. ஜர்மன் ஆக்ரமிப்புப் பிரதேசங்களிலிருக்கும் படை யெடுப்பு மூலஸ்தானத் துறைமுகங்களைப் பிரிட்டிஷ் விமானங்கள் தாக்கின. பர்லினிலும் வெளிப் பிரதேசங்களிலும் பல முக்கிய இடங்கள் தாக்கப்பட்டன. ஹானுவிலுள்ள தளவாடசாலை நாசமாயிற்று. வில்ஹெல்ம்ஸ் ஹாவனிலுள்ள கடற்படை மூலஸ்தானம் பலமாகத் தாக்கப்பட்டது.

30-ந்தேதி இரவு பிரிட்டிஷ் விமானப் படை ஜர்மன் படை யெடுப்புத் தளங்களைக் கடுமையாகத் தாக்கிற்று. எண்ணெய்த் தொழிற்சாலைகள், விமானத் தொழிற்சாலைகள், வெடி மருந்துத் தொழிற்சாலைகள், ரயில் போக்கு வரத்து, துறைமுகங்கள் எல்லாம் தாக்கப்பட்டன. ஜர்மனிக்குப் பலத்த சேதமேற்பட்டது.

நகரிலுள்ள குரங்குகளை யெல்லாம் பிடித்து தூரப் பிரதேசங்களுக்கு வெளியேற்றிவிட வேண்டுமென்று திருச்செங்கோடுப் பஞ்சாயத்து போர்டு தீர்மானித்திருக்கிறது.

## காந்திஜி பிறந்த தின விழா

மகாத்மா நீடு வாழ்க!

வாழ்க நீ யெம்மான் இந்த
வையத்து நாட்டி லெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர்
பாரத தேசம் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
மகாத்ம நீ வாழ்க வாழ்க!



### எழுபத் தோராவது ஆண்டைக் கடந்த மகாத்மா

காந்தியடிகளின் 72-வது பிறந்த தினத்தை முன்னிட்டு நேற்று புதன்கிழமை (அக்டோபர் 2-ந் தேதி) நாடெங்கும் காந்தி ஜெயந்தி சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

### காரைக்குடியில் கதர் வாரம்—காந்தி ஜெயந்தி

**28—9—40** சனிக்கிழமை காலை 10 மணிக்கு நகர சத்யாக்ரகக் கமிட்டித் தலைவர் காரியதரிசிகள் ஆகியோர் நகரின் பல பாகங்களிலும் கதர் விற்பனை செய்தனர். கதர் கட்டாதவர்களிடம் விற்பனை செய்தது குறிப்பிடத்தக்கது. ஏராளமான காங்கிரஸ் அங்கத்தினர்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

**29—9—40** ஞாயிறு காலை 8-30 மணிக்கு காந்தி சதுக்கத்தில் வேதாரண்யம் சர்தார் வேதரத்னம் எம். எல். ஏ. அவர்களால் கொடி வணக்கத்துடன் பொதுக் கூட்டமும் நடைபெற்றது.

**1—10—40** செவ்வாய் மாலை 3 மணிக்கு தக்ளிப் போட்டியும் இராட்டினப் போட்டியும் நடைபெற்றன. தக்ளிப் போட்டியில் 7 பேர்களும் இராட்டினப் போட்டியில் 8 பேர்களும் கலந்துகொண்டனர்.

**2—10—40** புதன்கிழமை காலை 10 மணிக்கு கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களால் கொடியேற்று விழா நடைபெற்றது. பகல் 12 மணிக்கு இராமநாதபுரம் ஜில்லாபோர்டு அங்கத்தினர் காரைக்குடி ஸ்ரீ ஏ. பீ. பியாரிலால் அவர்களால் ஏராளமான ஹரிஜனங்களுக்கு உணவளிக்கப்பட்டது.

மாலை 6 மணிக்கு காங்கிரஸ் மாளிகையிலிருந்து காந்தியடிகளின் உருவச்சிலை ஊர்வலம் புறப்பட்டு நகரின் முக்கிய வீதிகளின் வழியே காந்தி சதுக்கத்தை அடைந்ததும் இரவு 7 மணிக்குப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

### செட்டியார்கள் நல உரிமைச் சங்கம்

காரைக்குடி செட்டியார்கள் நல உரிமைச் சங்க நிலயத்தில் 29-9-40 காலை 9-30 மணிக்கு அடிகளின் 72-வது பிறந்த தினக் கொண்டாட்டம் நடைபெற்றது. வேதாரண்யம் சர்தார், அ. வேதரத்னம் M. L. A. அவர்கள் சொற்பொழி வாற்றினர்கள்.

### தேவகோட்டையில்

புரட்டாசிமீ 14உ மாலை 6-30 மணிக்கு காந்தி ஜயந்தி சரஸ்வதி வாசகசாலையில் கொண்டாடப்பட்டது. மாலை 4-மணிக்கு சொர்ணமூர்த்தி பெண் பாடசாலையிலிருந்து காந்திஜீ படம் ஊர்வலமாக மாணவிகள் தேசிய கீதம் பாடிக் கொண்டுவர வாசகசாலை வந்தடைந்தது. ஸ்ரீ சந்திரமௌலி அவர்களும், ஆசிரியர் முருகன் அவர்களும் காந்திஜீயின் வாழ்க்கை குறித்து திறம்படப் பேசினர்கள். மாணவிகள் வாழ்த்துப்பாட கூட்டம் இனிது நிறைவேறியது. மாணவிகளுக்கும் ஏனையோருக்கும் தின்பண்டங்கள் வழங்கப்பட்டன.

## ஆஸ்பத்திரி மீது குண்டு விச்சு

★

### எதிரி விமானங்கள் துரத்தியடிக்கப்பட்டன

செப்டம்பர் 23-ம் தேதி இரவு ஜர்மன் விமானங்கள் லண்டனுக்குள் வரவொட்டாதபடி தடுக்கப்பட்டன. பல விடங்களில் குண்டுகள் வீசப்பட்டன.

24-ம் தேதி காலை தேம்ஸ் நதி முகத்துவாரத்தை நோக்கிப் பெரிய விமானப் படை சென்றது. எதிர்ப்பு பீரங்கிகள் இப்படையைக் குலைத்தன. அன்று பிற்பகல் விரோதி விமானங்கள் சௌதாம்டன் பிரதேசத்தைத் தாக்கின. சில கட்டிடங்கள் சேதமுற்றன. பலர் காயமுற்றனர். 8 ஜர்மன் விமானங்கள் அழிந்தன. பிற்பகல் தென் கிழக்கு நகரமொன்று தாக்கப்பட்டது.

லண்டனிலுள்ள இந்திய மாணவர் ஹாஸ்டலில் வெடி குண்டு விழுந்ததால், பல பெரிய அறைகள் நாசமாயின. மொத்தம் 30,000 பவுன் நஷ்டமிருக்கும். வங்காளத்திலிருந்து சட்டக் கல்வி பயிலச் சென்றிருந்த ஸ்ரீ ஸென் என்ற மாணவர் மாண்டுபோனுர். ஸ்ரீ எம். வாகிள் என்ற மாணவர் காயமுற்ருர்.

24உ இரவிலும் ஜர்மன் விமானங்கள் லண்டனைத் தாக்கின. வட லண்டனில் ஒரு ஆஸ்பத்திரிமீது குண்டு விழுந்தது. நோயாளிகளில் யாரும் காயப்படவில்லை. மத்திய லண்டன்மீது நூற்றுக் கணக்கான எரி வெடிகள் வீசப்பட்டன. ஆஸ்பத்திரிகள் சேதமுற்றன.

25உ மத்திய லண்டனில் இன்னொரு ஹாஸ்டல் தாக்கப்பட்டது. இதில் 9 இந்திய மாணவர் இருந்தனர். காயமேதுவும் ஏற்படவில்லை. இந்த இரண்டு ஹாஸ்டல்களிலும் இருந்த இந்திய மாணவர்கள் சில வீடுகளுக்கும் ஆக்ஸ்போர்டு முதலிய இதர கல்லூரிகளிருக்குமிடங்களுக்கும் போய்விட்டார்கள். அன்று நடந்த விமானப் போர்களில் 26 ஜர்மன் விமானங்கள் அழிக்கப்பட்டன.

26உ எதிரி விமானங்கள் பிரிட்டனைத் தாக்கின. இரவில் லண்டன்மீது படையெடுக்க முயன்ற விரோதி விமானங்கள் தடுத்து ஓட்டப்பட்டன. அன்று ஜர்மன் விமானங்கள் சௌதாம்டனைத் தாக்கிய போது 34 விமானங்களை எதிரிகள் இழந்தனர். இரவில் லண்டனில் எரி வெடிகள் வீசப்பட்டன.

பிரஞ்சுக் கரையிலுள்ள ஜர்மன் நெடுந்தூர பீரங்கிகள் அன்று பிற்பகலில் ஒரு மணி நேரம் டோவர் பிரதேசத்தின் மீது குண்டுகளைப் பிரயோகித்தன. இருவர் மாண்டனர்.

27-ந் தேதியும் நடுப்பகலில் பிரஞ்சுக் கரையிலுள்ள ஜர்மன் பீரங்கிகள் பிரயோகம் செய்தன. பதிலாக பிரிட்டிஷ் பீரங்கிகளும் சுட்டன. இரு கரைகளிலிருந்தும் இந்தப் பீரங்கிப் போர் நீண்டநேரம் நடைபெற்றது. அன்று பிரிட்டனில் நடந்த விமானப் போர்களில் எதிரி விமானங்கள் 133 அழிந்தன. பெருவாரியான விமானங்களைக் கொண்டு அன்று பிரிட்டன் தாக்கப்பட்டது. பிரிட்டன் இழந்தவை 34. லண்டன் இரு முறை தாக்கப்பட்டது. தெற்கு லண்டனில் ஒரு தொழிற்சாலை சேதமுற்றது. பிற்பகல் லண்டனில் நடைபெறற உக்ரமான விமானப்போரை ராஜ தம்பதிகள் தெருவில் நின்று பார்த்தனர்.

28உ நூறு எதிரி விமானங்களுக்கு மேல் லண்டனுக்குள் நுழைய [illegible]. ஆனல் அவை துரத்தியடிக் [illegible] பட்டன.

29உ பிற்பகல் தென்கிழக்கு [illegible] தில் பல இடங்கள் மீது குண் [illegible] வீசப்பட்டன. எடின்பரோவில் [illegible] வீடுகள் நாசமாயின.

அன்றிரவும் 30உ காலையும் வெளி நகரங்களிலும் கிராமங்களிலும் குண்டுகள் வீசப்பட்டன. சென்ற சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் 11,000 ஸ்திரீகளும் குழந்தைகளும் லண்டனிலிருந்து கிராமப் பிரதேசங்களுக்கு மாற்றப்பட்டனர். 30உ ஜர்மன் விமானங்கள் ஆறு முறை பிரிட்டனைத் தாக்கின. தென்கிழக்கு இங்கிலாந்தில் கடுமையான யுத்தம் நடந்தது. அன்று மொத்தம் 47 ஜெர்மன் விமானங்கள் அழிக்கப்பட்டன.

30உ லண்டன் மீது மும்முறை படையெடுப்பு நடந்தது. ஆனல் எதிரி விமானங்கள் துரத்தியடிக்கப்பட்டன.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரெங்கூன், அக். 2உ

| | |
|---|---|
| நசேன் பெரிய, சிறிய மில்நெல் | 154/156 |
| ஷை மீடான் | 174/176 |
| சுகந்தி வெள்ளை அரிசி | 370/390 |
| லௌவ்ன் ஸெய்ன் | 340/360 |
| முழுப் புழுங்கல் | 382-8/385 |

### லண்டன் ரப்பர்

லண்டன், செப். 30உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு 11¾ பென்ஸ்.

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், செப். 28உ

ரப்பர் பிக்கல் ஒன்றுக்கு 50 வெள்ளி.

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, அக். 1உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 52½ சதம் |
| ஷீட் ,, | 55¾ ,, |

### கொப்பரா

முதல் தரம் ரூ. 30-25

### சென்னை மார்க்கெட்

சென்னை, செப். 30உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 28 | 8 | 6 |
| சவரன் (சில்லறையில்) | 28 | 9 | 0 |
| மூளை தோலா 1க்கு | 41 | 6 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 64 | 0 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

### சுபாஷ்மீது குற்றப்பத்திரிகை

அலிப்பூர் ஜில்லா மாஜிஸ்திரேட் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ்மீது இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி குற்றப் பத்திரிகை வாசித்துவிட்டார். தமக்கு இவ்வழக்கு நடவடிக்கையில் எவ்வித சிரத்தையுமில்லையென்று ஸ்ரீ போஸ் கூறிவிட்டார். அவரை ஜாமீனில் விடுவிக்க வேண்டுமென்று வக்கீல் கொடுத்த மனுவும் நிராகரிக்கப்பட்டது. மேற்கொண்டு விசாரணை அக்டோபர் 28-ந்தேதி நடக்கும்.

# நோட்டீஸ்

## தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

S. C. No. 262/1940

கை. வெ. அண்ணுமலை செட்டியார் } வாதி

கஸ்பா தேவகோட்டை வெள்ளையன் ஊரணி தென் கரையில் இருக்கும் சாமியப்ப ஆசாரி மகன் சா. மாமுண்டி ஆசாரி } பிரதிவாதி

வாதியால் பத்து வரவு கணக்குப்படி ரூ 300-க்கும் பின் வட்டி பின் செலவு வகையரு கிடைக்க வேணுமாய்ப் பிரதிவாதி பேரில் தாவா செய்து ஷை நம்பருக வைலாகி 18—10—40-உ வாயிதா போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையிருந்தால் அன்று கோர்ட்டாரவர்கள் முன்பகல் 10 மணிக்கு ஆஜராகித் தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

கே. ஆர். ஸ்ரீனிவாஸராகவய்யங்கார்,

தேவகோட்டை 30—9—40. } வாதியின் அட்வகேட்.

### ரிக்ஷாக்களைக் கட்டுப்படுத்த

சென்னை நகரில் ரிக்ஷாப் போக்குவரத்தைக் கட்டுப்படுத்தப் போலீஸ் கமிஷனருக்கு அதிகாரம் கொடுக்கும் முறையில் சென்னை சர்க்கார் ஒரு மசோதா கொண்டு வந்திருக்கிறார்கள்.

### சினிமா ஆபரேட்டர்களுக்குப் பரீட்சை

சினிமா ஆபரேட்டர்களுக்காக ஒரு பரீட்சை நடத்தச் சென்னை சர்க்கார் முடிவு செய்திருக்கின்றனர். இதற்கென ஒரு கமிட்டி நியமிக்கப்படும். இதில் பிரதம எலக்டிரிக்கல் இன்ஸ்பெக்டர் அல்லது அவர் பிரதிநிதியுடன், தென்னிந்திய பிலிம் வர்த்தக சபையாரால் அனுப்பப்படும் நான்கு பேர்கள் இருப்பார்கள். பரீட்சையில் தேறுபவர்கட்கு இந்த போர்டார் ஸர்டிபிகேட் வழங்குவர். இதன் மேல் சினிமா ஆபரேட்டர்களுக்கு லைசென்ஸ் கொடுக்கப்படும்.

### தோட்டிகளுக்கு 'போனஸ்'

ஐந்து வருஷத்திற்கும் அதற்கு மேலும் வேலை செய்துள்ள முனிசிப்பல் தோட்டிகளுக்கு மாதம் எட்டணு வீதம் 'போனஸ்' கொடுப்பதென்ற முனிசிப்பல் கமிஷனருடைய சிபார்சைப் பாளையங்கோட்டை நகர சபை அங்கீகரித்திருக்கிறது. தோட்டி கொடுக்கும் ஒவ்வொரு எட்டணுவுக்கும் நகர சபையார் எட்டணு கொடுத்து வரும். அக்டோபர் முதல் தேதியிலிருந்து இத்திட்டம் அமுலுக்கு வந்துவிட்டது.

### மரம் விழுந்து மரணம்

சேலம் கன்னிகா பரமேஸ்வரி பாங்கின் திருச்செங்கோட்டுக் கிளையின் ஏஜண்டு ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தியும் குமாஸ்தா வி. நாகராஜனும் செப்டம்பர் 29-ந்தேதி மாலை வெளியே நடந்து சென்றுகொண்டிருந்தபொழுது ஒரு மரம் மேலே விழுந்ததால் இருவரும் படுகாயமுற்றனர். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தமது வீட்டில் மரணமானுர். ஸ்ரீ நாகராஜன் சேலம் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்செல்லப்பட்டார்.

### ராமனுதபுரத்தில் ரேவனியு கமிஷனர்

சென்னை நிலவரிக் கமிஷனர் ஸ்ரீ ஸ்டுவர்ட் ஐ. ஸி. எஸ். செப்டம்பர் 29உ ராமனுதபுரம் எஸ்டேட் பரிசோதனைக்காக வந்திருக்கிறார்.

# திருவாடானை தாலூகா விலைவாசிகள் நிர்ணயம்

தேவகோட்டை ரெவனியு டிவிஷனல் ஆபீசர் தலைமையின்கீழ் 24-9-40ல் கூடிய விலை நிர்ணயக் கமிட்டிக் கூட்டத்தில் நிர்ணயிக்கப்பட்ட விலைகள்:

| சாமான் விவரம் | | நிர்ணயிக்கப்பட்ட விலை |
|---|---|---|
| நெல் முதல் தரம் | ரூ 1க்கு | 10 படி |
| ஷை 2ம் தரம் | | 10½ ,, |
| பச்சரிசி (ரங்கூன்) முதல் தரம் | | 4⅝ ,, |
| ,, இரண்டாந்தரம் | | 5¼ ,, |
| குருணை ¼ உடைப்பு | | 5¼ ,, |
| புழுங்கல் அரிசி (இருப்பு குறைவு) | | 4¾ ,, |
| ,, நயம் தொப்பி சம்பா | | 4½ ,, |
| ராகி (கேப்பை) | | 9 ,, |
| துவரம் பருப்பு | | 4 to 4½ ,, |
| உழுந்து | | 3⅛ ,, |
| பாசிப் பருப்பு | | 4 ,, |
| கடலை (கொண்ட கடலை) ரங்கூன் | | 4¾ ,, |
| ஷை பருப்பு | | 3¾ ,, |
| உப்பு | | 11 to 11½ ,, |
| மல்லி புதிது | | 6 ,, |
| சர்க்கரை பழுப்பு வீசை | 1க்கு | 0—9—0 |
| நாட்டு சர்க்கரை | | 0—4—0 |
| அஷ்டகிராம் | | 0—7—0 |
| மிளகாய் | 0-8-0 to | 0—8—6 |
| தீப்பெட்டி | 1க்கு | 0—0—3 |
| திருப்பூர் வேஷ்டி | ,, | 0—7—6 |
| ஈரோடு 4 முழம் ஷை | | 0—6—9 |
| சீமை எண்ணெய் சீசா | ,, | 0—2—9 |

### மாஜிஸ்திரேட் முன் சரணடைந்தார்

தேவிபட்டணம் பஞ்சாயத்து போர்டின் மாஜித் தலைவர் யஸ். யஸ் சீனி மொஹிதீன் காதர் சாகிப் முதுகுளத்தூரில் ஜாயின்று மாஜிஸ்திரேட் ஸ்ரீ ஸலீமான் அலி முன் சரணடைந்தார். பின்னர் எதிரி ஜாமீனில் விடுதலை பெற்றார். சீனி மொஹிதீன் காதரும் இன்னும் இருவரும் தேவிபட்டணம் பஞ்சாயத்து போர்டுத் தலைவர் குப்புசாமிப் படையாச்சியைக் குத்தியதாக அவர்கள்மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. முதல் எதிரியான கபீர் ராமனுதபுரம் சப் ஜெயிலிலிருக்கிறார்; 3-வது எதிரி இன்னும் அகப்படவில்லை.

### ராஜா ராம்மோகன் ராயின் 107-வது சிரார்த்த தினம்

உண்மை நாடுவோர் சங்கத்தின் ஆதரவில் ராஜா ராம் மோகன் ராயின் 107-வது சிரார்த்த தினம் செப்டம்பர் 29உ சென்னையில், கார்ப்பரேஷன் கமிஷனர் ஸ்ரீ ஓ. புல்லரெட்டி தலைமையில் கொண்டாடப்பட்டது. இன்னும் வேறு பல இடங்களிலும் சிறப்பாகக்கொண்டாடப்பட்டிருக்கிறது.

### பர்மா நிலம் வாங்கும் மசோதா

பர்மா நிலம் வாங்கும் மசோதாவை உடனே திருத்தி அமைக்க வேண்டுமென்று கோரி தென்னிந்திய வர்த்தக சபை வைஸ்ராய்க்கும் ஸர் கிரிஜா சங்கர் பாஜ்பாய்க்கும், ஸர் ஏ. ராமசாமி முதலியாருக்கும் தந்தி கொடுத்திருக்கிறது. பர்மாப் பிரதிநிதி சபை இம்மசோதாவை நிறைவேற்றி விட்டது. பர்மா செனட் முன்பு அது சீக்கிரத்தில் வரும். நிலச்சுவான்தார்களுக்கும் நிலம் சாகுபடி செய்கிறவர்களுக்கும் இம்மசோதா பெருங் கஷ்டத்தை விளைவிக்கு மென்று வர்த்தக சபை கருதுகிறது.

### ஸ்ரீ எஸ். எம். கோஷுக்குத் தடை உத்தரவு

வங்க மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ சுரேந்திரமோஹன் கோஷ் நெல்லூர் ஜில்லா அரசியல் மகாநாட்டில் தலைமை வகிக்கக் கல்கத்தாவிலிருந்து புறப்பட்டு வந்தவரைச் சென்னை மாகாணத்துக்குள் நுழையக் கூடாதென்றும் 24 மணி நேரத்துக்குள் திரும்பிவிட வேண்டுமென்றும் ரயிலில் அவருக்கு ஒரு தடை உத்தரவ சாதரா செய்யப்பட்டது. உத்தரவை வாங்கிக்கொண்டு அவர் விசாகபட்டணத்தி லிறங்கி கல்கத்தாவுக்குத் திரும்பிச் சென்றார்.

# காந்தியடிகள் படத் திறப்பு விழா

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

இப்போது மகாத்மா காந்தி பேச்சு சுதந்திரத்துக்காகப் போராட வேண்டுமென்கிறார். முன் உப்பு சத்தியாக்ரகம் என்று சொன்னபோதும் பலர் நகைத்தார்கள். இப்போதும் நகைக்கிறார்கள். ஆனல் இந்தப் பேச்சு சுதந்திரப் போரில் பெரிய தத்துவம் உள்ளடங்கிக் கிடக்கிறது. காரியக் கமிட்டித் தீர்மானத்தை ஜர்மனி அமெரிக்காவில் ஒலி பரப்பிற்று. 'இந்தியாவில் நாங்கள் பூரண சுதந்திரம் அளித்துள்ளோம்; யாரையும் போரில் சேரவேண்டுமென்று கட்டாயப்படுத்தவில்லை; எல்லோரும் தாமாகவே யுத்த முயற்சிக்கு உதவ வருகின்றார்கள்' என்று பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கை மேல் அறிக்கை விடுத்து வருகிறார்கள். இச்சந்தர்ப்பத்தில் மகாத்மா யுத்தத்தைப்பற்றி எங்கள் அபிப்பிராயத்தை தங்கு தடையின்றி வெளிப்படுத்த உரிமை வேண்டுமென்கிறார். இதை யாரும் மறுக்க முடியுமா? மறுத்தால் சர்க்கார் அறிக்கைக்குப் பொருள் உண்டா? பிரிட்டிஷ் சர்க்கார் உண்மையிலேயே இந்தக் கேள்வியினல் ஒரு மகா சங்கடமான நிலையிலேயே அகப்பட்டுக் கொண்டு விட்டார்கள்.

வைஸ்ராயுடன் பேசி முடிந்த பின், மகாத்மா என்ன சொல்கிறாரோ அதைக் கேட்டு நடக்க நாம் தயாராயிருப்போம்; நமது லட்சியத்தை அடைய நாம் அவர் மீது பூரண நம்பிக்கை கொள்வோம்.

நல்லுரைகள்

பின்னர் வைஸ் சேர்மன் ஸ்ரீ பழ. நாச்சியப்பா அவர்கள் பலரிடமிருந்து வந்த நல்லுரைகளைப் படித்து விட்டு, எல்லோருக்கும் நன்றி செலுத்த இரவு 7-30 மணிக்கு வைபவம் இனிது முடிந்தது. எல்லோருக்கும் பூச்செண்டும், சந்தனமும், குளிர் பானமும் வழங்கப்பட்டன.

### 'ஸ்டேட்ஸ் பீப்பிள்'

இப்பெயருடன் சமஸ்தானப் பத்திரிகை பம்பாயிலிருந்து மாத மிருமுறை வெளியாகு மென்றும், அதற்கு டாக்டர் பட்டாபி ஸீதாராமய்யா ஆசிரியராக இருப்பாரென்றும் தெரிகிறது.

### ஹரிஜனங்கட்கு உத்யோகம் தேட

தகுதியுள்ள ஹரிஜனங்களுடைய ஜாப்தா வொன்றை ஏற்படுத்தி, தேவையுள்ள ஸ்தாபனங்கட்கு அவ்வப்போது தெரிவித்து வேலை தேடிக்கொடுக்க முயற்சிப்பதாயும், எனவே யோக்கியதையுள்ள ஹரிஜனங்கள் தங்கள் பெயர் முதலியவற்றை சென்னை ராயப்பேட்டை ஹரிஜன சேவா சங்கத்துக்குத் தெரிவிக்கவேண்டுமென்றும் ஷை சங்கக் காரியதரிசி தெரிவித்திருக்கிறார்.

### கவி தாகூரின் அசௌக்கியம்

கவி தாகூர் சென்ற சில தினங்களாக அசௌக்கிய முற்றிருக்கிறார். இடையில் அவரது நிலை கவலைக்கிடமானதாயிருந்தது. கடைசியாக வெளியான செய்தியிலிருந்து, கவலைக்கிடமான நிலை மாறிச் சிறிது தூங்கியதாயும், மிகவும் பலஹீனமாயிருப்பதாயும் தெரியவருகிறது. கவி தாகூரின் தேக நிலையைப்பற்றி விசாரித்து மகாத்மா காந்தியுள்படப் பலர் தந்தியனுப்பியிருக்கின்றனர். இவ்வளவு சுகவீனத்திலும், காந்திஜி வைஸ்ராய் பேச்சின் பலன் என்னவாயிற்று என்று கவி தாகூர் விசாரித்தாராம்.

### தங்கக்கட்டி களவு

சென்ற சனிக்கிழமை இரவு சென்னை ஸெண்டிரல் ஸ்டேஷனில் பம்பாய் மெயிலில், சென்னை வியாபாரி ஒருவர் மூன்று பெட்டிகள் நிறையத் தங்கக் கட்டிகளைப் பம்பாய்க்கு அனுப்பினர். மறுநாட் காலை ராயலச் செருவு ஸ்டேஷனில் கார்டு பரிசோதித்த போது, 6 தங்கக் கட்டிகளுள்ள ஒரு பெட்டி காணமற் போயிருந்ததாம். லட்சம் ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள தங்கம் களவாடப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்.

# கொழும்பு அன்புமார்க்க சங்கம்

16-9-40 திங்கள் இரவு மணி 11 க்கு, கொழும்பு அன்பு மார்க்க சங்கத்தின் ஔடதத் தோட்டத்தில், பௌர்ணமிப் பிரசங்கம் நடைபெற்றது. கூட்டம் பால் போல் வெளுத்த பூரணச் சந்திரிகையின் ஒளியிலேயே ஆரம்பமாயது. ஸ்ரீமத் சுவாமி பூபதிதாசர் அவர்கள் மகான் ஞான பூபதிகளின் உரையைத் தழுவி, ருசிகரமான ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அதன் சாராம்சம் வருமாறு:— அகந்தையால் அழிந்தோர் அனேகர்; அகந்தையை அழிப்பது ஆத்மார்த்தம். மனித உள்ளத்தைக் கெடுத்துத் தள்ளும் கொடிய அகங்காரத்தை ஒழித்தமையினுலேயே, காவிரிப்பூம்பட்டினத்தவராகிய, வைசிய வழியினர், இயற்பகை நாயனர், ஆண்டவனேடு இரண்டறக் கலந்ததைக் கண்டோம். அகந்தையை அழிப்பது அதிக சிரமம். இதனல் தேவர்களும் தம் நிலை குலைந்தனர்! அகங்காரத்தால் அமரர்களும் நிலை மாறும்போது மனிதர் எம்மாத்திரம்? ஆனல் அகந்தையை விட்டுவிடுதல் கொண்டு, அமரரையும் விட மனிதன் மேலோனுகின்றான் என்பது உண்மை. சிந்தை செம்மையுற வேண்டும். யாரைப்பற்றியும் இழிவு எண்ணம் தோன்றாது ஒழியவேண்டும்.

கோழைத்தனம் ஒரு நற்குண மன்று.





மதிப்புரை

# மாதவீ கங்கணம்

[முதனூல் ஆசிரியர்: ஸ்ரீயுத ரமேச சந்திரதத்தர். வழிநூல் ஆசிரியர்: ஸ்ரீ வெ. கா. ராமநாதன் பி. ஏ., பி. எல். முதற் பாகம், 326 பக்கம்; விலை: ரூ 2. இரண்டாவது பாகம், 230 பக்கம்; விலை: ரூ 1-4-0. பிரசுரித்தோர்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை. கிடைக்குமிடம்: ஷை கம்பெனி சென்னை; பாரதி பிக்சர் பாலஸ், காரைக்குடி.]

அக்பர் காலத்துச் சரித்திர சம்பந்தமான ஒரு சிறந்த நவீனம். வங்காளத்தில் வீரநகரம், தேவிபுரம் இரண்டு ஜமீன்கள். ஆப்கானியர், மொகலாயர் படையெடுப்புக் கொந்தளிப்பில் அகப்பட்டு ஒன்று ஒரு பக்கமும் மற்றொன்று இன்னொரு பக்கமும் சார்ந்து நின்றதால் பரம்பரை வைரிகளாயின. தேவிபுரத்து அதிபதி நவகுமாரர்; வீரநகரத்து அதிபதி நரேந்திரன், சிறுவயதிலேயே தந்தையை இழந்தவன். நவகுமாரனுடைய மந்திரி கோகுலதாஸ். அவன் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். வீரநகரத்து ஜமீன்தாருக்கு புத்த வயது வராததால், அவரை ராஜீய விஷயங்களில் பழக்கவும், ஜமீன் விஷயங்களைக் கவனிக்கவும் தேவிபுர ஜமீன்தார் நவகுமாரர் வங்காள கவர்னரான ராஜா தோடர்மல்லரால் நியமிக்கப்பட்டார். இப்படியாக தேவிபுர ஜமீன்தாரின் ஆதிக்கத்தில் வீரநகர ஜமீன் வருகிறது. ஹேமலதை நவகுமாரரின் பெண். அவள் சிறு பருவமுதலே ஒன்றாகச் சேர்ந்து விளையாடிய நரேந்திரனை முழு மனதுடன் நேசிக்கின்றாள். அவள் தாய் இதையறிந்து மனம்பூரித்து, பல தலைமுறைகளாகப் பரம வைரிகளாக இருந்து வரும் இரு ஜமீன்களை இந்தக் கல்யாணத்தின் மூலம் ஒன்றுபடுத்தி விடலாம் என்று ஆசை கொள்கின்றாள். நவகுமாரரும் அதற்கிசைகிறார். ஆனல் அவரது மந்திரி கோகுல் தாஸிடம் அவர் கைப்பாவை இரு குடும்பங்களையும் வேறுபிரித்து, வீரநகரத்தைத் தேவிபுரத்தோடு இணைத்துவிட வேண்டுமென்பது அவனது அவா. இதற்கு வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்து வந்தான். முதன் முதலில் நரேந்திரனுக்கு ஒத்த வயதுடைய ஸ்ரீசன் எனும் இளைஞனைக் கொண்டுவந்து ஹேமலதைக்குத் தோழனுக்குகின்றான். நரேந்திரனும் ஸ்ரீசனும் நற்குணங்கள் பொருந்தியவர்கள் தாம். ஒரு ஜமீன்தாருக்குரிய ஆண்மையும் வீரதீர லட்சியங்களும் நரேந்திரனிடமிருந்தன. அவற்றோடு ஆத்திரமும் படபடப்பும் இருந்தன; சாந்தம் எனும் நற்குணம் மட்டும் அவனிடமில்லை. அவனது வாழ்வு உயிரற்றுப் போனதற்குக் காரணம் இந்தக் குறைதான்.

கோகுல்தாஸ் தன் எண்ணம் ஈடேறுவதற்காக அரசியல் துறையிலும் பல சூழ்ச்சிகள் செய்கின்றான். வீர நகரத்தின் பொருளாதார நிலையைச் சீர்குலைத்து அதை மீளாக்கடனுக்குள் வீழ்த்துகின்றான். இதனல் அந்த ஜமீன் நீண்ட காலத்துக்கு அதற்கு உரியவனிடம் சேராமற் போய்விடுகின்றது. துர்க்கா பூஜையின் போது படகுப் பந்தயம் நடைபெறுகிறது. இதில் தந்திரமிக்க கோகுல்தாசின் சூழ்ச்சி உச்சஸ்தானத்தை அடைகின்றது. தேவி புரப்படகை நவகுமாரரும், வீர நகரப் படகை நரேந்திரனும் செலுத்தும்படி நேரிடுகிறது. இந்தப் பந்தயத்தில் நேரிட்ட ஒரு சம்பவம் நரேந்திரனுடைய எதிர்கால வாழ்க்கையின் போக்கையே மாற்றி அவன் நாட்டைத் துறந்து பல வித அல்லல்களுக்குட்படும்படி செய்கிறது. அவனது உயிர்த் தோழனுன ஸ்ரீசன் அவனை எச்சரித்தும் அவன் கவனிக்கவில்லை. இரண்டு படகுகளும் ஒன்றுடன் ஒன்று மோதின; தேவிபுரத்துப் படகு நீரில் அமிழ்ந்தது. நவகுமாருடைய உயிருக்கு ஆபத்து விளைவிக்க முயற்சித்ததாக நரேந்திரன் குற்றஞ் சாட்டப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டான். அக்பர் சக்ரவர்த்தியின் தளகர்த்தரான ராஜா மானஸிம்ஹர் வந்து விஷயங்களை விசாரணை செய்து, வீரநகர ஜமீனுக்கு வேறு காரியஸ்தரை நியமித்திருப்பதாயும், நரேந்திரன் தம்முடன் ராஜமஹால் சென்று, ஜமீன் நிலைமை சீர்ப்படும்வரையிருக்க வேண்டுமென்றும் கட்டளையிட்டார். நவகுமாரரும் கோகுலதாசும் விரும்பியபடியே எல்லாம் நடைபெற்றன.

இச் சம்பவங்கள் நிகழுதற்கிடையில் ஹேமலதையும் நரேந்திரனும் பரஸ்பரம் காதலிக்கத் தொடங்கிவிட்டனர். நரேந்திரன் தன்னுட்டைவிட்டுச் செல்லுமுன் நந்தவனத்தில் ஹேமலதையைச் சந்தித்து, தனது காதலைத் தெரிவிக்கின்றான். பின், தனது காதலுக்கு அடையாளமாக மலர் நிறைந்த மல்லிகைக் கொடியொன்றைப் பறித்து ஒரு வளையலாகச் செய்து அதை அவள் கரத்தில் இட்டான்.

நரேந்திரன் நாட்டைவிட்டுச் சென்று ஒன்பது வருடங்கட்குப் பிறகு மீண்டும் அவனைச் சந்திக்கின்றோம். பல போர்க்களங்களில் அவன் தன் ஜயத்தை நிலை நிறுத்தி சக்ரவர்த்தியுடைய அபிமானத்தைப்பெற்றுவிட்டான்; ஆடவரே பார்க்க முடியாத அந்தப்புர ஸ்திரீகளுக்குக்கூட அவன் புகழ் எட்டியது. அவர்களது தயவால் அவன் கடு நோயினின்றும் தப்புகின்றான். அந்தப்புரத்திலேயே அவனுக்கு சிகிச்சையும் நடக்கிறது. இச்சமயத்தில் அவனுக்குப் பக்கத்திலிருந்து பேருதவி புரிந்தவள் ஜெலேகா எனும் தார்த்தாரி தேசத்து அடிமைப் பெண். அவள் அவனைப் பெண் உடை தரிக்கச் செய்து அக்பாது பட்ட மகிஷியான ஜோத்பாயின் அரண்மனைக்கு அழைத்துச் செல்கின்றாள். அங்கே ஸலீம் இளவரசரைச் சந்திக்கின்றனர். பின் அங்கிருந்து இருவரும் ரக்யா பேகம் சுல்தானு அரண்மனைக்கு ஸலீமுடன் செல்கின்றனர். அங்கே ஸலீம், எதிர்காலத்தில் நூர் ஜஹானுக விளங்கப்போகிறவளும் தனது காதலியும் ஷேர் ஆப்கனின் மனைவியுமான பாரசீகப் பெண் மிஹ்ருந்நிஸாவைச் சந்திக்கிறான். ஸலீம் அவளைப் பார்த்து விட்டுத் திரும்பிய பின், நரேந்திரனுக்கு ஆண் உடையில் அந்தப் பாரசீகப் பெண்மணியின் பேட்டி கிடைக்கின்றது. அவள் அவனுடைய வரலாறுகளையெல்லாய் விசாரிக்கின்றாள். ஜெலேகா அரண்மனைப் பேடியைப் படுகாயப்படுத்தினள். இந்தக் குற்றத்திற்காகவும், அந்தப்புரத்துக்குள் ஒரு ஆடவனை அழைத்துச் சென்றதற்காகவும் அவளைத் தேடுகின்றனர். அவள் மறைந்தாள். அக்பர் ஆக்கினைப்படி நரேந்திரன் ராஜஸ்தானம் செல்கின்றான். செல்லும் போதே ஜெலேகாவையும் அடிமைத்தளையிலிருந்து விடுதலை செய்துவிட்டான். இருவரும் சேர்ந்து போகின்றனர். வழியில் முன்ஸுரின் ஆட்கள் ஜெலேகாவைப் பிடிக்க முயற்சித்தனர். ஆனல் தோல்வியுற்றனர். பகைவரிட மிருந்து காப்பாற்றிய வீரனை அந்தத் தார்த்தாரி தேசத்து அடிமைப் பெண் பாராட்டுகின்றாள். அவன் அவளது மையலில் சிக்குண்டு காதல் மொழிகள் பகர்கின்றான். ஆனல் அவள் மறைந்துவிட்டாள். எனினும் அவள் மாறுவேடத்தில் அவனைப் பின் தொடர்ந்து செல்கின்றாள், பால பாடகன் வேஷத்தில் அவள் மீண்டும் அவனைக் கூடாரத்தில் சந்தித்து, பழைய வரலாறுகளை அவனுக்கு ஞாபக மூட்டுகின்றாள். ராஜபுதனத்திலிருந்து ஆக்ரா போகும்வழியில் பாலைவனத்தில் முன்ஸுரின் ஆட்களால் ஜெலேகா மரண காயப்படுத்தப்பெற்றாள். பின்னர் தான் தன்னேடுவந்த பாடகன் ஜெலேகா என்று நரேந்திரனுக்குத் தெரியும், மரணம் நெருங்கியுள்ள அச்சந்தர்ப்பத்தில் இருவரும் தங்கள் தங்கள் காதலுணர்ச்சியைத் தெரிவித்துக் கொள்கின்றனர். நரேன் அந்தத் தார்த்தாரிப் பெண்ணை முத்தமிட, அவளும் மனமகிழ்ச்சியோடு உயிர் விடுகின்றாள்.

இதற்கிடையில் நவகுமாருடைய ஏற்பாட்டின்படி ஹேமலதைக்கும் ஸ்ரீசனுக்கும் மணம் நடைபெறுகிறது. எனினும் ஹேமலதை நரேந்திரனுடைய துர்ப்பாக்கியங்களையும், அவனது விருப்பம் நிறைவேறாமல் போனதுபற்றியும் சிந்தித்து வருந்திக் கொண்டேயிருந்தாள். நவகுமாரர் காலஞ்சென்றார். அவரது மனைவி தவஞ்செய்து தன் வாழ்நாளைக் கடத்தும் நோக்கத்துடன் மதுராபுரி செல்ல விரும்பினுள். அவளோடு சென்று நரேந்திரனை அழைத்து வரலாமென்று ஸ்ரீசனும் ஹேமலதையும் சென்றார்கள். ராஜமஹாலில் ஹேமலதை மிஹ்ருந்நிஸாவை அரண்மனையில் சந்தித்து நரேந்திரனது வீரப்பிரதாபங்களை நேரில் கேட்டு மகிழ்கின்றாள். பின் அவளுடைய உதவியால், ஆக்ரா அரண்மனையில் நடைபெற்ற ஜனனக்கடைகள் விழாவுக்குச் சென்று அங்கே அக்பர் சக்ரவர்த்தியைச் சந்திக்கின்றாள். அவர் முன்பு தனது கோரிக்கையைத் தெரிவிக்க அவர், நரேந்திரனுடைய ஊழியத்தைப் பாராட்டியதோடு, தக்க மரியாதைகளுடன் வீர நகரத்துக்கு அனுப்புவதாகவும் வாக்களிக்கிறார். பின்னர் மதுராபுரி ஆலயத்தில் ஹேமலதையும் நரேந்திரனும் சந்திக்கின்றனர். நிகழ்ந்தவற்றைக் கேட்ட நரேந்திரன் வாழ்க்கையில் வெறுப்புற்றுத் தன்னுட்டுக்குத் திரும்பிச் செல்ல மறுக்கிறான். ஆனல் முடிவில் அவளே வெற்றிபெறுகிறாள். தன்னேடு ஊர்திரும்ப நரேந்திரன் இணங்கிய பிறகு, காடு அறந்து செல்லுமுன் காதலுக் கறிகுறியாய் தன் கையில் கட்டிய மாதவீ கங்கணத்தை நீக்கி விடும்படி வேண்டிக்கொண்டான். இது காலபரியந்தம், வாடி வதங்கிப்போன முல்லைக் கொடியைப் பத்திரமாகத் தைத்துக் கையில் கட்டியிருந்தாள் அந்தப் பெண்மணி. அவள் விருப்பப்படியே அவன் அதை அவிழ்த்து நதியில் போட்டான். இத்தோடு கதை முடிகிறது.

நீனமான கதைதான். நடையும் சாதாரண நடைதான். எனினும் கதைப் போக்கு மனதைக் கவரத்தக்கதாயிருக்கிறது. ஹேமலதை, ஜெலேகா எனும் இரு பாத்திரங்களின் சிருஷ்டி வியக்கத்தக்கதாயிருக்கின்றன. இக்கதை மூலம் ஆசிரியர் ஹிந்துப் பெண்களுடைய பதிவிரதா தர்மத்தின் உயர்வை விளக்கியிருக்கின்றார். சரித்திர சம்பந்தமாகவுள்ள பல ருசிகரமான விவரங்களையும் இதில் படிக்கின்றோம். அந்தக் காலத்து மொகலாய அந்தப்புரங்களில் நடைபெற்ற ரகசிய நடவடிக்கைகள், அக்பருடைய அதியற்புத குணங்கள், ராஜ மாளிகைகள், அக்காலத்துப் பண்டிகைகள், பழக்கவழக்கங்கள், முக்கியமாக ஜனனக் கடை விழா எல்லாம் மிக ருசிகரமாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஸலீம், மன்னரான பிறகு அவரது மனைவியாகி, நூர் ஜஹான் எனும் பெயர்பூண்டு ஆட்சி புரிந்த பெண்ணரசியின் முற்கால சரிதத்தையும், அவளது வீரதீரத்தையும், அரசிளங் குமரனையும் அடிபணியச் செய்யும் அபார சக்தியையும் இக்கதையில் ஆசிரியர் நமக்கு நன்கு சித்திரித்துக்காட்டி யிருக்கின்றார். ஒவ்வொருவரும் படித்தின்புற வேண்டிய கதை. வங்காளத்திலும் ஆங்கிலத்திலும் பெரும் புலவராய்த் திகழ்ந்து, இரு மொழிகளிலும் பல நூற்களை எழுதிப் பேரும் புகழும் பெற்ற ஸ்ரீயுத ரமேச சந்திர தத்தரது இவ்வுயரிய சித்திரத்தைத் தமிழ் மக்களுக்குத் தந்துதவிய பெருமை அல்லயன்ஸ் கம்பெனியாரைச் சேர்ந்திருக்கிறது. புத்தகங்கள் இரண்டும் நல்ல முறையில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

## காரைக்குடி நகர சபைக் கூட்டம்

### நிறைவேறிய தீர்மானங்கள்

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று சென்ற சனிக்கிழமை மாலை 5-மணிக்கு "காந்தி மாளிகை"யில் சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெற்றது. தலைவருடன் பதினைந்து மெம்பர்கள் வந்திருந்தனர். முதலில் முத்தாளம்மன் ஊருணிப்பார்க் சம்பந்தமாக ஸ்ரீ சு. கந்தசாமிப் பிள்ளை கேட்டிருந்த கேள்விகட்குப் பதிலளிக்கப்பட்டது. ஷை பார்க் ஆர்ச்சிலிடப்பட்டிருக்கும் பெயரில் முனிசிபாலிடியின் பெயர் சேர்க்கப்படாமல் விட்டது தவறுதலானதென்றும், 'முனிசிபல்' என்ற சொல் சேர்த்துத் திருத்தியமைக்கப் பெறுமென்றும், முறைப்படியில்லாமல் காணப்படும் சில விளம்பரக்கற்கள் மற்றப் பார்க்குகளைப் போல திருத்தியமைக்கப்படும் என்றும் பதிலளிக்கப்பட்டது.

9-வது வார்டு டி. எஸ். 177-ம் நிர் கட்டிடமானது பொது ஜனங்களின் தெய்வ வழிபாட்டிற் கெனப் பிரத்தியேகமாய் ஒதுக்கப்பட்ட கட்டிடமல்லவென்றும், ஆகையால் அதைச் சொத்து வரியினின்றும், விலக்கு செய்வதற்கில்லையென்றும் உள்ள கமிஷனரின் உத்தரவின் மேல் வந்த அப்பீலில், ஷை (மேலமடம்) கட்டிடத்திற்கு வரி விதிக்க வேண்டாமென்று தீர்மானிக்கப்பட்டது.

8-வது வார்டு டி. எஸ். 169 (1)-வது நிர். இடத்தில் சுமார் 400 சதுர அடி விஸ்தீரணத்தில் ஜட்கா நிலையம் ஏற்படுத்த முனிசிபாலிடிக்குக் கொடுக்கக் கலக்டரைக் கேட்டுக் கொள்வதென்றும், ஜட்கா ஸ்டாண்டில் பீஸ் வசூலிப்பதில்லை யென்றும் தீர்மானிக்கப்பட்டது.

முனிசிப்பல் ஆஸ்பத்திரி மராமத்துச் செய்ய எஸ்டிமேட்டு ரூ 570 அனுமதிக்கப்பட்டது. சிவன் கோவில் தெரு ஆரம்பப் பள்ளிக் கூடத்தில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களுக்கு எஸ்டிமேட் ரூ. 610 விவாதத்துக்கு வந்தபோது, அங்கு புதிய ஷெட் அமைக்க வேண்டாமென்று முடிவு செய்யப்பட்டது.

திங்கட்கிழமைச் சந்தைப் பேட்டையில் வசூலிக்க வேண்டிய வாடகை பீஸ் வகையரா நிர்ணயிக்கும் விஷயம் பொது வேலைக் கமிட்டிக்கு விடப்பட்டது.

காலியான விஜிலன்ஸ் கமிட்டி காரியதரிசி ஸ்தானத்துக்கு ஸ்ரீ நி. ம. நடராஜன் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கமிஷனர்களுக்கும் இலாகா தலைமை அதிகாரிகளுக்கும் உள்ள கடிதப் போக்குவரத்து சம்பந்தமாய் சித்தூர் முனிசிபல் கவுன்சில் தீர்மானித்துள்ள தீர்மானத்தை இந்தக்கவுன்சிலும் அங்கீகரித்து (எல்லாக் கடிதப் போக்குவரத்துகளையும் சேர்மன் மூலமே கமிஷனர் நடத்தவேண்டும்) அவ்வாறே தீர்மானிப்பதென முடிவு செய்யப்பட்டது.

முனிசிபல் கவுன்சிலுக்குச் சொந்தமான அல்லது கவுன்சில் அனுபவித்து வரும் கட்டிடங்களில் பறக்கவிடும், கட்சிக் கொடிகள் வாங்குவது உள்பட அரசியல் கட்சிகள் சம்பந்தமான செலவுகள் சர்க்காரால் சாங்ஷன் செய்யப்பட வேண்டிய அசாதாரணச் செலவு ஆகும் என்று தெரிவித்துள்ள சர்க்கார் உத்தரவு ரிக்கார்டு செய்யப்பட்டது.

சிறுவர்களிடையே யுத்தப் பிரசாரம் செய்து அவர்களிடமிருந்து உபாத்யாயர்கள் மூலமாய் நிதி சேகரிப்பது உசிதமல்லவென்று சர்க்காருக்குத் தெரிவிக்க வேண்டுமென்பதான திருநெல்வேலி ஜில்லாபோர்டின் தீர்மானமும் ரிக்கார்டு செய்யப்பட்டது.

இன்னும் பல மாமூலான விஷயங்கள் கவனிக்கப்பட்டு, பல பில்லுகளுக்கு சாங்ஷன் செய்யப்பட்டு, இரவு 7-10க்குக் கூட்டம் முடிந்தது.

### கடல் தண்ணீரில் சோடா

சோடா காஸ்டிக்கைக் கொண்டு பல வகை மருந்துகளும், கண்ணாடி, சோப், கலர் முதலியவைகளும் செய்கின்றார்கள். இது ஆப்பிரிக்காவினின்றும் ஜப்பானுக்கு சென்றுகொண்டிருந்தது. இப்போது யுத்தம் காரணமாக செல்லவில்லை. எனவே ஜப்பானிய இரசாயன நிபுணர்கள், ஆராய்ச்சியிறங்கினார்கள். கடல் தண்ணீரிலிருந்து காஸ்டிக் சோடா செய்யத் தலைப்பட்டு விட்டார்கள்.

---



### ஹிட்லர் தோற்பது நிச்சயம்
#### பிரபல அமெரிக்கர் ஜோஸ்யம்

பைபிளைப்பற்றிப் பிரசங்கம் செய்யும் பிரபல அமெரிக்க மேதாவியான மிஸ்டர் டன்பார் டப்ளியு ஸ்மித் என்பவர் கொழும்பு டவுன் ஹாலில் செய்த பிரசங்கத்தின்போது, ஹிட்லர் தோல்வி அடைவது நிச்சயமென்றும், பைபிளில் கூறப்பட்டுள்ள ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டே தாம் உறுதியாகச் சொல்வதாயும் குறிப்பிட்டார்.

### பாரச்சூட் உற்பத்தி
#### மாகாணங்களில் ஆராய்ச்சி

பாரச்சூட் என்னும் விமானக் குடைகளைப் பூரணமாய்ச் செய்வதற்கு வேண்டிய பொருள்களும் வசதிகளும் தத்தம் மாகாணங்களில் எவ்வளவு கிடைக்கக் கூடும் என்பதைப்பற்றி ஆராயும்படி மாகாணங்களிலுள்ள சப்ளை கன்ட்ரோலர்களுக்கு சப்ளை இலாகா உத்தரவிட்டிருக்கிறது.

விமானக் குடைகள் தயாரிப்பதற்கு வேண்டிய பொருள்கள் மிகவும் உயர்ந்த தரமாயிருக்கவேண்டும். தொழிலாளர்களும் நல்ல திறமை வாய்ந்தவர்களாயிருக்கவேண்டும். இதில் கிளைக்கக்கூடிய பல பிரச்னைகளும் சீக்கிரத்தில் சுலபமாகத் தீர்த்துவிடும் என்று எதிர் பார்ப்பதற்கில்லை. ஆனால் அப்படி அவை தீர்ந்துவிட்டால் யுத்த முயற்சிக்கு இந்தியா இன்னும் சிறந்த உதவி புரிய முடியும்.





## ஒரு ரூபாய் நோட்டில் இரண்டு தினுசுகள்

### சர்க்கார் அறிக்கை

சமீபத்தில் பழக்கத்திற்கு வந்திருக்கும் ஒரு ரூபாய் நோட்டுகள் சிலவற்றில் 1935-ம் வருஷத் தேதியிட்டு, ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் தலை அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த நோட்டுகள் இரண்டு விதமான காகிதத்தில் அச்சிடப்பட்டிருப்பதால், இவை உண்மையான நோட்டுகள்தானா என்ற சந்தேகம் ஏற்பட்டிருப்பதால், இதுபற்றி சந்தேக நிவர்த்தி செய்யும் பொருட்டு இந்திய சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். அதில் இரு நோட்டுகளும் செல்லுமென்று விளக்கியிருக்கிறார்கள்.

ஏ. பி. வி. டி. என்ற எழுத்துக்களை உடைய நோட்டுகளில் ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் படம் நீர் எழுத்தில் நோட்டின் இடது பாகத்தில் போடப்பட்டிருக்கிறது. வேறு சில நோட்டுகளில் "இந்தியா கவர்ன்மெண்டு" என்ற எழுத்துக்களால் சூழப்பட்ட ஐந்து கோண நட்சத்திரமொன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. இது நோட்டின் ஏதாவது ஒரு பாகத்தில் காணப்படும். எண்களும் ஒன்றுக்கொன்று வித்தியாசமாகவே காணப்படும். இரண்டாவது தினுசு நோட்டுகளிற் சில பச்சை அட்டையுள்ள புத்தக ரூபத்தில் பைண்ட் செய்யப்பட்டிருப்பதால், இவற்றிலிருந்து கிழித்தெடுக்கப்பட்ட நோட்டுகளின் இடது பக்கத்து விளிம்பில் துவாரங்களிருக்கும்.

### ஏழு முறை கவுன்சிலைவிட்டு வெளியேறினர்!

கோவை நகர சபை சமீபத்தில் கூடிய போது, கவுன்சிலிலுள்ள ஜஸ்டிஸ் கட்சி மெம்பர்கள் இருவர், கவுன்சிலில் நிறைவேறிய சில தீர்மானங்களை ஆட்சேபிக்கும் பொருட்டு, ஒவ்வொரு தீர்மானத்தின் போதும் ஒவ்வொரு முறையாக ஏழு முறை கூட்டத்தைவிட்டு வெளியேறித் திரும்பி வந்து நடவடிக்கையில் கலந்து கொண்டனராம்.

### தேவகோட்டை சரஸ்வதி வாசகசாலை: ஆண்டு விழாத் தேதி மாற்றம்

மேற்படி வாசகசாலையின் 15-வது ஆண்டு நிறைவு விழா 13-10-40 ஞாயிறன்று காலை, மாலை இரு வேளைகளிலும் சென்னை நகர சபை மேயர் ஸ்ரீஜத், எஸ். சத்தியமூர்த்தி எம். எல். ஏ. அவர்கள் தலைமையில் வாசகசாலைக் கட்டிடத்தில் நடைபெறும் எனக் காரியதரிசி அறிவிக்கின்றார்.

பணத்தை ஒரு வேலையாளாக உடையவனே உண்மை மனிதன்; மனதில் நினைக்கிறபடியே ஒருவன் ஆவான்.





## சிவகங்கைச் செய்திகள்

(நமது நிருபர்)

### சமஸ்தான திவான்

திவான் ஸ்ரீ எம். பி. பாய், ஐ. வி. எஸ். அவர்களின் உத்தியோக காலம் 30-9-40ல் முடிவடைந்ததை மேல்கொண்டு 1-10-40 முதல் 9 மாதத்துக்கு 30-6-41 முடிய பதவி வகிக்கும்படி உத்தரவாகியிருக்கிறது.

### புதிய உதவி திவான்

தற்சமயம் உதவி திவானாக விருந்து வரும் ஸ்ரீ எஸ். பி. பெருமாள் பிள்ளை அவர்கள் பி. ஏ., 7-10-40 முதற்கொண்டு ஓய்வு எடுத்துக்கொள்ளப் போவதால் அதற்குப் பதிலாக ஸ்ரீ பாலாஜி ராவ் அவர்கள், பி. ஏ., (மாஜி டிப்டி கலெக்டர்) 7-10-40 முதற்கொண்டு பதவி வகிக்கும்படி உத்தரவாகியிருக்கிறது.

### உத்தியோக மாற்றம்

கண்டதேவி தாலூகா தாசில்தார் ஸ்ரீ எஸ். துரைசாமித் தேவரை திருப்புவனம் தாலூகாவிற்கும், திருப்புவனம் தாசில்தார் ஸ்ரீ ஆர். குமாரசாமி நாயுடுவை இளையாங்குடிக்கும் இளையாங்குடி தாசில்தார் ஸ்ரீ வி. கிருஷ்ண அய்யங்காரை திருக்கோஷ்டியூர் தாலூகாவிற்கும், திருக்கோஷ்டியூர் தாசில்தார் ஸ்ரீ எஸ். ராமச்சந்திர அய்யரைக் கண்டதேவித் தாலூகாவிற்கும் தாசில்தார்களாகப் பதவி வகிக்கும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது.

### ராஜாஸ் கிரிகேட் கிளப்

1940-41 ம் வருடத்திற்கு அடியிற் கண்டவர்கள் உத்தியோகஸ்தர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்: போஷகர்கள் சிவகங்கை ராஜா, குமார ராஜா சிவகங்கை; ஸ்ரீ எம். பி. பாய் ஐ. வி. எஸ். தலைவர்; ஸ்ரீ ஜி. வி. நடராஜ அய்யர் காப்டன்; ஸ்ரீ டி. நாராயண அய்யர் காரியதரிசி; ஸ்ரீ எஸ். ராஜகோபால் ராஜு மானேஜர்.

ஷை கிளப் மெம்பர்கள் 3-10-40ல் புதுக்கோட்டை கிரிகெட் கிளப் மெம்பர்களுடனும், 6-10-40ல் தென்னிந்திய ரயில்வே கிரிக்கெட் கிளப்புடனும் மாச் விளையாடுவார்கள்.

### பார்லிமெண்டில் சர்ச்சிலின் மகன்

பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் ஏக புத்திரர் மிஸ்டர் ரண்டால்ப் சர்ச்சில் காமன்ஸ் சபை மெம்பராகப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

பெண்கள் செவ்வையாக நடத்தப்பட்டு இன்பமாக வாழ்கின்ற குடும்பங்களையே கடவுள் வாழ்த்துகிறார்.

## உள்நாட்டுச் செய்திகள்

★

### இராமநாதபுரம் ஜில்லா மருத்துவ குல வாலிப சங்கம்

23-9-40 பிற்பகல் 2 மணிக்கு ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் தலைமையில் ஷை சங்கத்தின் மகாசபைக் கூட்டம் கா. மீனாக்ஷிபுரம் சங்கக் கட்டிடத்தில் நடைபெற்றது. திருவாளர்கள் முகவை ராமச்சந்திரன் (முனிஸிபல் ஸ்கூல் ஆசிரியர்), கண்டரமாணிக்கம் ஆசி. வேலுபண்டிதர், வயிரவன்பட்டி சி. சுப்பையா பண்டிதர் ஆகியோர் முறையே எழுத்தறிவின் முக்கியம், ஒற்றுமை உணர்ச்சியின் மேன்மை. குல வாலிபர்களின் கடமை என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவு செய்தார்கள். பின்னர் சங்கத்தில் இனி செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றி முதியோர் இளைஞர் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு முடிவு செய்யப்பட்டு வந்தனத்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### திருப்பத்தூரில் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம்

செப்டம்பர் 24உ மாலை 6-30 மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் தலைவர் சந்திரசேகரம் அவர்கள் தலைமையில் நடந்த கமிட்டிக் கூட்டத்தில் K. பைரவரெத்தினம், கதிரேசன் இவர்களைக் காரியதரிசிகளாகத் தேர்ந்தெடுத்தும் அய்யாவு அம்பலம் அவர்களின் தேச சேவைகளைப் பாராட்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### ஜவஹர் வாசகசாலை, ஷண்முகநாதபுரம்

வாசகசாலைக் கட்டிடத்தில் தலைவர் ஸ்ரீ நா. இராமனுதன் அவர்கள் தலைமையில் புரட்டாசி 9உ பொதுக்கூட்டம் நடைபெற்றது. தீபாவளிக்குச் சென்ற வருஷத்தைக் காட்டிலும் அதிகமாகக் கதர் விற்பனை செய்வதென்றும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மகாத்மா காந்தியின் தலைமையை யேற்றுக்கொண்டதற்குப் பாராட்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### கோட்டையூரில் சமூகச் சீர்திருத்த நாடகம்

'பாரதி வாசகசாலை, கம்பன் நூல் நிலையம்' இவற்றின் நிதிக்காக அதன் அங்கத்தினர்களால் 'ரமணி பி.ஏ.' என்ற சமூக சீர்திருத்த நாடகம், காரைக்குடி ஸ்ரீமான் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தலைமையில் விக்கிரம-ஞு புரட்டாசிமீ 28உ (13—10—40) ஞாயிற்றுக்கிழமை கோட்டையூர் ஸ்ரீ அண்ணமலையார் டாக்கீஸில் நடைபெறும்.

### தேவகோட்டை

10-9-40 இரவு இளைஞர் சங்கத்தின் அங்கத்தினர்களால் பிரஞ்சு செல்லும் இவ்வூர் கௌரவ நிதிபதியும் சங்க உப தலைவருமான திரு. சோம. செல்லப்பா அவர்கட்கு திரு மு. காசிநாதன் அவர்கள் தலைமையில் வழியனுப்பு உபசார விருந்து நடைபெற்றது. திருவாளர்கள் சி. இராமனுதன் டி. ஆர். அருணசலம், சேவு. பழனியப்பன் ஆகியவர்கள் விருந்தினரைப் பாராட்டிப் பேசினர்.

புரட்டாசி-மீ 14உ (29-9-40) ஞாயிற்றுக்கிழமை மாலை 6-மணிக்கு ஸ்ரீ சரஸ்வதி வாசகசாலை அங்கத்தினர்களின் பொதுக் கூட்டமொன்று தலைவர் உ. மு. அ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அப்போது 16-வது ஆண்டுக்கு ஸ்ரீமான்கள் சுப. மூ்ணுதன் செட்டியார் தலைவராகவும், சுண. கதிரேசன் அவர்கள் காரியதரிசியாகவும், சோம. இராமனுதன் அவர்கள் பொக்கிஷதாராகவும் இவர்களுடன் 7 நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### வாலாஜாபாத் இந்து மத பாடசாலை

கோட்டையூரிலிருந்து திருவாளர்கள் வ. லெ. சிதம்பரம்செட்டியார் அவர்களும் நா. அரு. கருப்பஞ் செட்டியார் அவர்களும் 15, 16-9-40 தேதிகளில் வாலாஜாபாத்தில் தங்கியிருந்தனர். அவர்கள் மாணவர்களது நடவடிக்கைகளைச் சிலாகித்தனர். 16—9—40 ல் கும்பகோணம் நகராண்மை கழக உறுப்பினர் திரு. C. பழனியப்ப முதலியார் அவர்களும் திருச்சி பிரபல வியாபாரி T. K. இராமசாமி அய்யர் அவர்களும், காஞ்சி ஆதிநாராயண முதலியார் அவர்களும், டிரிபண்டல் இன்ஸ்பெக்டர் திரு. S. S. கிரி அவர்களும் பாடசாலையையும் மாணவர் இல்லத்தையும் தொழிற்சாலையையும் பார்வையிட்டு மகிழ்ந்தனர். பின் மாணவர் கூட்டத்தில் பேசுகையில் இந்தப் பாடசாலை இந்தியா தேசத்திற்கே ஓர் வழிகாட்டியாக விளங்கும் எனக் கூறினர். சென்னை மாகாண உடற்பயிற்சித் துணைத் தலைவர் திரு. ஆண்ட்ரூஸ் அவர்கள் இந்துமதப் பள்ளியின் மாணவர்களது உடற்பயிற்சி விளையாட்டுகளான ஆசனங்கள், கோயில் கட்டல், சிலம்பம், கத்தி முதலிய எல்லாவற்றையும் ஒவ்வொன்ருகப் பார்த்து மகிழ்ந்தனர். கடைசியில் மாணவர் கூட்டத்தில் பேசுகையில் தாம் இம்மாகாணத்தில் பார்த்த எல்லா ஆரம்பப் பாடசாலைகளில் உள்ளதைவிட இங்கு உடற்பயிற்சி சிறந்துளது என்று சொல்லிப் பாராட்டி மகிழ்ந்தனர். பாடசாலைத் தலைவர் திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் யாவருக்கும் நன்றி செலுத்தினர்.



## உள்நாட்டுச் செய்திகள்

★

### குமாரவேலூர் கிராம விளையாட்டுச் சங்கம்

இந்த சங்கத்தைச் சேர்ந்த ஏழு பேர்கள் கொண்ட கால் பந்துக் கோஷ்டி 23-9-40 திங்கட்கிழமை சருகணி சென்று அவ்வூர் Y. M. F. என்றடவுன் கோஷ்டியுடன் அவ்வூர் மைதானத்தில் ரிட்டர்ன் மேட்ச் ஆடியதில் மேற்படி கோஷ்டிக்கு இரண்டு கோல் போட்டு ஒரு கோல் வாங்கி ஒரு கோலால் ஜெயமடைந்தார்கள்.

### போஸ் நிலையம் அரியக்குடி

29-9-40 மாலை 3 மணிக்கு லெட்சுமி விலாஸ் மாளிகையில் ஸ்ரீ வயி. சா. இராமசாமி செட்டியார் தலைமையில் நடந்த கமிட்டியின் அவசரக் கூட்டத்தில், காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து அரியக்குடிக்கு ரோட்டுப் போடும் விஷயமாக 23-8-40ல் இக்நிலையத்தின் ஜெனரல்பாடி மீட்டிங்கில் தீர்மானம் செய்து, இராமனுதபுரம் ஜில்லா போர்டுத் தலைவருக்கு ஷை தீர்மானத்தை அனுப்பியிருந்தும், அதற்கு நாளது தேதிவரைப் பதில் வராது கண்டு மீண்டும் ஷை தீர்மானத்தை ரிஜிஸ்தர் மூலம் அனுப்ப இக்நிலைய அமைச்சர் அரு. ஷண்முகநாதனுக்குக் கமிட்டி அதிகாரம் கொடுக்கிறதென்று தீர்மானித்தும் இன்னும் பல விஷயங்கள். ஆலோசனை செய்தும் இக் கூட்டம் 4-30 மணிக்கு இனிது நிறைவேறியது.

—

பணம் பெரிதல்ல; புகழ் பெரிதல்ல; கல்வி பெரிதல்ல; ஆனல் அன்பே பெரிது.

—

உரிமையை மறுக்கும் எவனும் உரிமைக்கு உரியவனல்ல.

## நோட்டீஸ்

### தேவகோட்டை சப் கோர்ட்டு

1940-ஞு E. P. நிர். 137-ல்

—

ரெங்கோன் ஹைக்கோர்ட்டு

1935-ஞு C. R. நிர். 185.

கோட்டையூர் அ. க. ராம. மெ. சித. சிதம்பரம் செட்டியார் வகையரு } வாதிகள்

எழுவங்கோட்டை தாலுகா கண்டனூரிலிருக்கும் N. P. A. K. முத்தையா செட்டியார் 1
ஷையூரி லிருக்கும் முத்தையா செட்டியார் குமாரர் N. P. A. K. லெக்ஷ்மணன் செட்டியார் 2
ஷையூரி லிருக்கும் ராமன் செட்டியார் குமாரர் N. P. A. K. நாச்சியப்ப செட்டியார் 3 } பிரதிவாதிகள்.

ஷை நிர் டிக்கிரியை நிறைவேற்றும் பொருட்டு வாதிகள் தரப்பில் இந்த நிம்பர் மனு தாக்கல் செய்து 15-10-40உக்கு வாயிதா ஏற்பட்டிருப்பதில் ஆக்ஷேபணையிருக்கும் பக்ஷத்தில் அன்று கோர்ட்டில் காலை 10 மணிக்கு 1 to 3 பிரதிவாதிகள் ஆஜராகித் தெரிவித்துக்கொள்ள வேண்டியது. தவறினல் எக்ஸ்பார்ட்டி செய்து மேல் நடத்தப்படு மென்பதை அறிவிக்கலாயிற்று.

K. R. சுப்பிரமணிய அய்யர்,
தேவகோட்டை } அட்வகேட்.
24—9—40. }

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

